உ

கடவுள் துணை.

இளையான்குடி

# ஸ்தல புராணம்,

# மாரநாயனார் சரித்திரமும்,

சேகப்பா ஒலியவர்களின் பௌத்திரர்

## முகம்மதுமீரா சுவாமி யவர்கண்மீது

## திருப்பதிக கீர்த்தனங்களும்

அடங்கியிருக்கின்றன.

இஃது

நாமனார்

வீர. பெருமாள் செட்டியார்

அவர்களாலும்,

மற்றும் பல வித்வ சிரோமணிகளாலும்

இயற்றப்பெற்றது.

சுப்பிரமணியர் பிரஸ்,

இரங்கூன்.

இராக்ஷஸ ஹ]　1-9-15.　[ஆவணி மீ

Acc No: 14605
Q1: 38

உ

கடவுள் துணை.



31-3-20
14605

இளையான்குடி

# ஸ்தல புராணம்,

# மாரநாயனார் சரித்திரமும்,

சேகப்பா ஒலியவர்களின் பௌத்திரர்

## முகம்மதுமீரு சுவாமி யவர்கண்மீது

# திருப்பதிக கீர்த்தனங்களும்

அடங்கியிருக்கின்றன.



KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 14605

இஃது

நாமனூர்

வீர. பெருமாள் செட்டியா ரவர்களாலும்,

மற்றும் பல வித்வ சிரோமணிகளாலும்

இயற்றப்பெற்று,



சுப்பிரமணியர் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

இரங்கூன்



இராக்ஷஸ ஹு] 1-9-15. [ஆவணி மீ



21-38

# சாற்றுக்கவிகள்.

இராமநாதபுரம், சிவகெங்கை மஹாவித்வான்
ஜவாதுப்புலவரவர்களின் ஆண் சந்ததியில்
ஐந்தாவது பௌத்திரர்
முகம்மதுமீர் ஜவாதுப்புலவரவர்களாற் கூறிய
எண்சீராசிரிய விருத்தம்.

சீர்வளரு மிளையானற் பதியின் மேவுந்
திவ்யகுண முகம்மது மீருவின் மீது
பேர்வளரு பெருமாளுஞ் சுப்பிர மண்யன்
பிரியமனை வியுமுகந்து வணங்கற் பாவாய்த்
தார்வளரும் பக்திரச மொழுகச் செய்தார்
தரணிதனி லிவர்க்குநிகர் யாவருண்டு
ஏர்வளரு மின்னூலை யெவரும்போற்றி
யெங்கும்பிர பல்யமுட னிலங்கத் தானே.

---

மேலூர்ச்சேகரம் குன்னகரம்பட்டி
மு. ரு. ம. துரைசாமி பிள்ளை இயற்றிய
அறுசீர் விருத்தம்.

முத்திபதத் தினையடைய மூலமெனு முட்கருத்தின்
முடிவு காட்டுஞ்
சித்தன்முகம் மதுமீரு சேவடிக்கே சிந்தையதாய்த்
தீது நீத்து
வித்தகசர்க் கரைப்பந்தற் றன்னிலருந் தேன்மாரி
வீழ்ந்தாற் போல
சுத்தமுடன் பாமாலை நற்பெருமாள் சுப்ரமண்யன்
சூட்டி னனே.

திருப்புத்தூர்ச்சேசுரம் ஏரிமாநகரம்,
மு. க. ரு. மீனுட்சிசுந்தரம் பிள்ளை இயற்றியது.

அறுசீர் விருத்தம்.

சந்ததமு முத்திதனிற் சார்ந்தொழுகி யெங்கணுமே
தழைத்து வாழுஞ்
சுந்தரமால் முகம்மதுமீ ருவென்னுஞ் சோதியின்மேற்
சுவைதேன் போலுஞ்
செந்தமிழாற் றுதிசெய்தார் பெருமாள்சுப் பிரமணியர்
ஜெகத்தோ ரீதை
அந்தமென்றே கேட்பினுளந் தெளிந்தருளு ஞானமுமே
அடைகு வாரால்.

---

இராயவேலூர்
மு. துரைசாமி முதலியாரவர்கள் கூறிய
அறுசீர் விருத்தம்.

குளகம்.

கலைவளரும் பொருளுணர்ந்துக் கசிந்துருகித் தனிப்பரத்தின்
கண்வ ளர்ந்து
நிலைவளரும் படிப்படியிற் நிகழ்த்திமனை யறம்வளர்த்தி
நிலைத்து வீங்கு
மலைவளரும் புனலிடையி லுதிக்குமணி யெனப்பலநல்
லற்பு தங்கள்
மலைவளரும் படிப்புரிந்த மகம்மதுமீ ருவொலிநன்
மாண்பார் மீது,
வணிககுல திலகன்பெரு மாள்சுப்ர மணிப்பிள்ளை
மகிழ்ந்து சூடு
மணிகலனு கத்துலங்கு மனைவியிரா ஜம்மாளு
மகம கிழ்ந்து
மணிகளிழைத் தொடுத்ததுபோற் பாமாலைச் செந்தமிழான்
மதித்து யாருந்
தணிவுபெற விசைத்தனர்க ளிருமையிலும் புகழ்பெறுகத்
தகைவாய் மன்னே.

31-3

உ

ஹரி ஓம்:

# இளையாங்குடி

# ஸ்தல புராணம்.

தேவாதிகளுக்கெல்லாம் அரசனாகிய தெய்வேந்திர மஹாராஜன், சப்த மகா ரிஷிகளும், கின்னரர், கிம்புருடர், கருட காந்தர்வர், சித்தவித்தியாதரர், அஷ்டதிக்குப்பாலகர்கள், சப்த கன்னியர்கள், நாரதர், வேதவியாசர், நவக்கிரஹாதிகள் சமஸ்தமான தேவதைகள் புடைசூழ, தேவதுந்திமி முழங்க, ரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகை முதலான அப்ஸர ஸ்திரீகள் பரத நாட்டியமாட கொலுவிருக்கும்போது, தெய்வேந்திர மகாராஜன் சமுகத்திலிருக்கிறவர்களைப்பார்த்து பூலோகத்திலே மனுமுறை தவராமல் தேவாலயம், பிர்மாலயம் உண்டுபண்ணி தெய்வ விசுவாசம் மறவாமல் ராஜ்ஜியபரிபாலனஞ் செய்துக்கொண்டிருந்த ராஜாக்கள் யாவரேனு முண்டோ? பின்னும், பூலோகத்திலே சிவாலயங்களும், நதிதீர்த்தங்களும் இருக்கிறதுண்டோ ? அதில் முக்கியமான நதி தீர்த்தமும், தேவாலயத்தையும் சொல்லுங்களென்று தெய்வேந்திர மஹாராஜன் கேட்கும்போது நாரத மஹாரிஷி சொல்லுகிறார்.

வாருணமையா, தெய்வேந்திர மஹாராஜனே ! சொல்லுகிறேன் கேளும், பூலோகத்திலே சூரியகுலவம்ஸ இராஜாக்களில் சக்ரவர்த்தியாயிருந்து மனுமுறை தவராமலும், தேவ விசுவாசம் மறவாமலும் இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்தவர்களுக்கு ஈஸ்வர கடாக்ஷமுண்டாகி சகல தேவதைகளும் ஏவற்றொழில் செய்து சாயுஜ்ய பதவி அடைந்திருக்கிறவர்கள் வெகுவாயுண்டு. இன்னும் பூலோகத்திலே ஸ்தலங்களும், தீர்த்தங்களுமிருக்கிறது. தீர்த்த விசேடங்கள் நம்மாலே அளவிட்டுச் சொல்லப்போகா தென்று நாரத மஹாரிஷி தெய்வேந்திரனுக்குச் சொல்ல, தெய்வேந்திர மஹாராஜன் வெகு சந்தோஷப்பட்டு நாரதமுனியை கூட்டிக்கொண்டு ரதமேறி பூலோகத்தில் பிரவேசித்து, ஆங்காங்குள்ள சிவாலயம், விஷ்ணுலயங்களைத்

தரிகித்து, நதிதீர்த்தங்களாடியும் வரும்போது, உத்தரபூமி கடந்து தக்ஷிணபூமி நோக்கி ரதம்விட்டு வரும்போது திருக்கூடப்பதியில் வந்து தீர்த்தமாடி விஷ்ணுவைத் தரிசனஞ் செய்து, நந்திகேஸ்வரர் பட்டண மடைந்து, ஆனைமடுவில் தீர்த்தமாடி, காளை மரலிங்கத்தை தரிசனஞ்செயதுகொண்டு தென்முகமாய் வருகிறபோது பாலாறு நதியைக் கண்டு தெய்வேந்திரன் நாரத மஹா முனிவரைப் பார்த்து இந்த நதி என்ன நதி? இந்நதியினுடைய வர்த்தமானம் தங்களுக்கு தெரிந்திருக்குமாகில் சொல்லுமையா வென்று கேட்க, நாரத மகாரிஷி சொல்லத் தொடங்கினர்.

கேளுமையா தெய்வேந்திர மஹாராஜனே! முன்னொரு காலத்திலே மஹா விஷ்ணுவும், சிவனும் இந்த ஸ்தலத்தில் மகாவிஷ்ணு தேனுறு அழைப்பித்தார். அக்காலத்தில் சிவன் இத்தேன் ஆற்றைக் கண்டு பாலாருக மாற்றி அநேக காலம் வ சஞ்செய்துக்கொண்டிருந்தபடியினலே இந்த நதி பாலாறு நதி யென்று பேராச்சுது ஆகையினலே இதில் தீர்த்தமாடினலும் தேவாலயம் கட்டிவைத்தாலும் பிறவா திதி பெறுவாரென்று நாரதர் சொல்ல, தெய்வேந்திர மகாராஜன் அப்பாலாற்றில் தீர்த்தமாடி தென்முகமாய் ரதத்தை நடத்திக்கொண்டு வரும்போது பாலாற்று நதிக்கரையிலிருந்து வைகை நதி வடகரை தொடுத்து ஒரு யோசனைத்தூர விஸ்தீரணம் நான்கு திசையும் படர்ந்தடர்ந்து குவியவும், விருக்ஷங்கள் நிறைந்த ஆரண்யங்கள் காணப்படவும், தெய்வேந்திரன் ஆச்சர்யப்பட்டு அவ்வாரண்யவழியாய் ரதமோட்டிக்கொண்டு வரும்போது ரதம் பூமியிற் புதைந்துபோய் ரதம் போகாமல் நின்றுவிடவும், தெய்வேந்திரன் என்ன காரணத்தினல் ரதம் நின்றுவிட்டதென்று யோசித்து இவ்விடம் எதாகிலும் அதிசயமுண்டோ வென்று ஒரு யோசனைத்தூரம் நான்கு திசையும் பார்க்கும்போது வில்வ விருக்ஷமாகக் காணப்பட்டதே யல்லாமல், மற்றொன்றும் காணப்படவில்லை. அப்போது தெய்வேந்திரன் நாரத மஹா முனிவரைப் பார்த்து என்ன அதிசயம் ஒரு யோசனைத் தூரம் நான்கு திசையிலும் வேறொரு விருக்ஷங்களில்லாமல் வில்வ விருக்ஷங்களாகவே யிருக்கிறது. மத்தியில் நமது ரதமும் பூமியிற் புதைந்துவிட்டதாகையால் என் மனதிற்கு மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது இது யாது காரணத்தினலோ தெரியவில்லை யென்று நாரதரைக் கேட்க, நாரதர் சொல்லுகிருர். கேளுமையா தெய்வேந்திர மஹாராஜனே! நீர் தீர்த்தமாடிய

பாலாறு நதியின் அருகாமையில் ஈஸ்வரன் அனேக கோடி காலம் வாசஞ்செய்துக்கொண்டிருந்தபடியினாலே ஒரு யோசனை விஸ்தீரணமுழுமையும் இதர விருக்ஷமில்லாமல் வில்வ விருக்ஷமாகவேயிருக்கிறதும், நமது ரதம் பூமியிற் படிந்துகிடக்கிறதும் யாது காரணத்தினாலென்றால். நீர் பூலோகத்திற்கு வந்ததும், நதிதீர்த்தமாடியதும், ஆலயங்கள் தரிசித்ததும், பின்பு தாங்கள் தெய்வலோகத்திற்குச் செல்லுவதும், இப் பூலோகத்தில் அறிந்துக்கொள்ளும்படியாகவும், இவ்விடத்தில் நதி தீர்த்தம் உண்டுசெய்வதற்காகவும், சிவலிங்க பிரதிஷ்டையும், விஷ்ணு பிரதிஷ்டையும் உண்டுசெய்வதற்காகவும், தங்கள் நாமதேயம் என்று மழியாதிருக்கும்படியாகவும் பூமாதேவி உமது ரதத்தை வசப்படுத்தியிருக்கிறாள். ஆகையால் நீர் தீர்த்தமும் சிவலிங்கப் பிரதிஷ்டையும், விஷ்ணு பிரதிஷ்டையும் உண்டுசெய்தால், உமது ரதத்தை பூமாதேவி விடுவித்துவிடுவாளென்று நாரதர் சொல்ல, அந்தப்படியே தெய்வேந்திர மஹாராஜன் நல்ல காரியமென்று நினைத்து, சகல தேவதைகளையும் வரவழைத்து முப்பத்து முக்கோடி தேவர்களும் நல்ல முகூர்த்த தினத்தில் தீர்த்தமும், அரிஹரபுத்திரசாத்தா உண்டுசெய்து அவருக்கு நல்லூருடையவரென்றும், தீர்த்தத்துக்கு தேவ தீர்த்தமென்றும் நாமகரணமிட்டு, தீர்த்தக் கரையில் சிவலிங்கப் பிரதிஷ்டையும் உண்டுசெய்து ராஜேந்திர ஜோதீஸ்வரர் என்று நாமகரணம் சாற்றி தீர்த்தத்தில் தெய்வேந்திர மஹாராஜனும், தேவர்களும், நாரதமுனிவரும் தேவலோகம் போய்ச் சேர்ந்தார்கள். பிறகு அப்பட்டணத்திற்கு நல்லூர் நகரமென்று வழங்கிக்கொண்டிருந்தது. சிலது நாள் சென்றதின்பின் ரோமபாத ரிஷிக்கு ஸ்ரீஹத்தி வந்து தொடர்ந்தது ஆகையாலவர், ஆங்காங்குள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்து தீர்த்தங்களுமாடி மதுராபுரிக்கு வந்து பொற்றாமரையில் தீர்த்தமாடி சுந்தரேஸ்வரக் கடவுளை தரிசனம் செய்துக் கார்த்திருக்கும்போது ரோமபாத ரிஷிக்கு நல்லூரிலே போய் நல்லூருடையவரை தரிசித்து தேவதீர்த்தமாடி ராஜேந்திரரை தரிசித்ததால் ஸ்ரீஹத்தி விட்டுவிடுமென்று சுந்தரேஸ்வரக் கடவுள் உத்திரவு செய்ய அக்கட்டளைப்படியே ரோமபாதரிஷி நல்லூருடையவரிடம் வந்து சேவித்துக்கொண்டிருக்கும்போது நல்லூருடையவர் ரோமபாத ரிஷியை தேவ தீர்த்த மத்தியிற் போய் ராஜேந்திரரை தரிசிக்கச் சொன்னபடி ரோமபாதரிஷி தேவதீர்த்த மத்தியில் வரும்போது ஸ்ரீஹத்தி தேவதீர்த்த வடகரையில் நின்றுவிட்டது. ரோமபாதரிஷி திரும்

பிப் பாராமல் இராஜேந்திரரைக் கண்டு அநேகமாய் ஸ்தோத்திரம் செய்து, பிரதக்ஷணமாக வந்து நமஸ்கரித்து தரிசனம் செய்துக் கொண்டிருந்து இராஜேந்திரர் ஆலயத்துக்குத் தென் பாரிசம் தீர்த்தமும், சிவலிங்க பிரதிஷ்டையும் உண்டுபண்ணி, பிரசன்ன மன்னேஸ்பரனென்று நாமகரணம் சாற்றி அங்ஙனமே யிருந்து சிவ கடாக்ஷத்தால் சாயுஜ்ஜிய பதவி யடைந்தார். இப்பால் சில நாள் சென்ற பிறகு வடக்கே உத்தர பூமியில் மதிகுக னென்ற சக்ரவர்த்தியின் குமாரன் கொச்சடையபபனுக்கு புத்திர சந்தான மில்லாமையால் அநேக தானதருமங்கள் செய்தும், சிவாலயம், விஷ்ணுவாலயம் பிரம்மாலயம் கட்டி தடாகங்களுண்டுபண்ணியும், நந்தவனம் வைத்தும் புத்திரசந்தானமில்லாமல் தவவேடம்பூண்டு ஆரண்யங்களிலும் மலைச்சாரல்களிலும் சஞ்சரித்து வரும்போது கவுசாந்தி மடுவிலிருக்கிற சவுண்டிலிகருடைய ஆச்சிரமத்தைக் கண்டு அவ்விடத்தில் சவுண்டிலீகரைப் பார்த்து பணிவிடைசெய்துவரும்போது சிலநாட் சென்று சவுண்டிலீகர் தயைபுரிந்து, வாரும், பிள்ளாய் கொச்சடையப்பனே ! நீ நம்மிடம் கார்த்துக்கொண்டிருக்கும் விசேஷமென்ன? என்று கேட்க, அப்போது தான் அங்கு வந்த விபரமும், தனக்கு புத்திரபாக்யமில்லா மனக்குறையையும், அன்னவரிடம் சொல்லவும் சவுண்டிலீகர் சொல்லுவார். புத்திர சந்தானம் வேண்டுமானல் ஈஸ்பரரை நோக்கி மகிமையுள்ள நதிக்கரை, தீர்த்தக்கரை, சிவாலயங்களுள்ள விடத்தில் சிவத்தியானத்துடன் தவம் புரிவீராகில் ஈஸ்வர கடாக்ஷத்தால் உனக்கு புத்திர சந்தானம் கிடைக்குமென்று சவுண்டிலீகர் சொல்ல, கொச்சடையப்பன் கேட்டு சுவாமி ! முக்கியமான தீர்த்தமும், சிவாலயங்களுமிருக்கு மிடத்தை அடியேனுக்கு தெரிவித்தால் தங்கள் கட்டளைப் பிறகாரமே நடந்துக்கொள்ளுகிறேனென்று கேட்க, சவுண்டிலீகர், சொல்லுவார் வாரய் கொச்சடையப்பனே ! தக்ஷிண தேசத்தில் ஆனைமடுவும், காளை லிங்கமும் நந்திகேஸ்வரப் பட்டணமு மிருக்கிறது அதற்குத் தென்பாரிசம் பாலாறு நதி இருக்கிறது அதற்குத் தெற்கே நல்லூரென்றொரு பட்டணமும், தேவதீர்த்தமும், இராஜேந்திர லிங்கமு மிருக்கிறது. அந்தச் சிவஸ்தலத்திற் சென்று தேவதீர்த்தக் கரையிற் சென்று ஈஸ்வரனை நோக்கி தபசு புரிவாயாகில், ஈஸ்வரர் வந்து உனக்கு வேண்டிய புத்திர சந்தான மளிப்பாரென்று சவுண்டலீசர் கொச்சடையப்பனுக்குச் சொல்ல, அவ்வாறே விடைபெற்றுக்கொண்டு நல்லூரடைந்து தேவதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, இராஜேந்தி

ரரைத் தரிசித்து, தேவதீர்த்தக்கரை ஈசான்னிய முகமாய் நோக்கி ஈஸ்வரரைக் குறித்து தவஞ்செய்துகொண்டிருக்க, அதுகால் தெய்வேந்திர மஹாராஜன் தெய்வலோகம் விட்டு கைலாச மலைச்சாரிலிருக்கும் நதியில் தீர்த்தமாடவேண்டுமென்று ரதமோட்டிக்கொண்டு நதி தீர்த்தங்களுமாடி அவ்விடத்திலிருக்கும் அதிசயங்களையுங் கண்டு மகா சந்தோஷத்துடனே புறப்பட்டு கேசரி மார்க்கமாய் ரதம்விட்டுக்கொண்டு வருகிறபோது பரமேஸ்வரனும், பரமேஸ்வரியும் அந்தரங்கமாய்ப் பேசிக்கொண்டிருக்கையில் தெய்வேந்திரனுடைய ரதமானது கேசரி மார்க்கமாய் வரும் பரிச்சிதையைப் பரமேஸ்வரி கேட்டுத் திகைத்து பராமுகமா யிருந்ததைச் சிவன் கண்டு தனது ஞானதிருஷ்டியா லறிந்து ஆகாயத்தைப் பார்க்கும்போது தெய்வேந்திரன் ரதமோட்டி வருகிறதைக் கண்டு விசனித்து தெய்வேந்திரனை நோக்கி நீ பூலோகத்தில் நரனுக ஜனன மெடுக்கக் கடவாயென்று ஜபித்தார். உடனே தெய்வேந்திரன் திடுக்கிட்டு ஈஸ்வரரை வணங்கித் தெண்டனிட்டு அடியேன் விமோசனத்திற்கு வகை யெப்படி யெனக் கேட்க, சிவன் சொல்லுவார். நாம் சிலநாட் சென்று, பூலோகத்தில் நல்லூரில் தேவதீர்த்தக் கரையில் கொச்சடையப்பனென்பவன் புத்திரனில்லா மனக்குறையால் என்னை நோக்கித் தவஞ்செய்துகொண்டிருக்கிறுன். ஆகையால் அவனுடைய மனக்குறையை நீக்கும்பொருட்டு பூலோகத்திற்கு வருகிறோம். அதுபரியந்தம் நீ பூலோகத்தில் சஞ்சரித்துப் பிறகு தெய்வலோக மடையக்கடவாயென்று கூறி, ஈஸ்வரர் எழுந்தருளினுர்.

பின்பு தெய்வேந்திரனும் தெய்வலோகம் வந்து சேர்ந்தான். அது நிற்க, இப்பால் பூலோகத்தில் நல்லூரில் தேவதீர்த்தக் கரையில் தவஞ்செய்துக்கொண்டிருந்த கொச்சடையப்பன் முன்பாக காளகண்ட திரிநேத்திரதாரியாகிய ஈஸ்வரன் ஈஸ்வரி சமேதராய் பிரசன்னமாக வந்தார்கள். கொச்சடையப்பன் கண்டு திரியாங்க சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு அனேகமாய் ஸ்தோத்திரஞ் செய்து நின்ருன். ஈஸ்வரர் கிருபைகூர்ந்து வாரும் பிள்ளாய்! கொச்சடையப்பனே! நீ வேண்டிக்கொண்டவரம் என்ன, கேளும் பிள்ளாயென்று ஈஸ்வரர் கட்டளையிட கொச்சடையப்பன் சுவாமி எனக்குப் புத்திர பாக்யம் அருட்செய்யவேண்டுமெனக்கேட்க, நல்லது உனக்குப் புத்திரன் பிறந்து சக்ரவர்த்தியாய் திரிலோகங்கராஜயும்

ஆள்வானென்று சொல்லி, ஈஸ்வரர் கைலாயத்திற் கெழுந்தருளினார். அப்பால் தெய்வேந்திரனுக்குச் சிவனிட்டசாபம்தொடர்ந்து புத்திரனாக ஜனிக்கவும் வெள்ளை யானை எடுத்துவந்து பூலோகத்தில் நல்லூரில் கொச்சடையப்பனிடம் இந்திராதித்தனென்று பெயரிட்டுக் கொடுக்கவும், தனது பாரியாளாகிய தர்மாபதியும் மகா சந்தோஷமடைந்து அக்குழந்தையைப் பள்ளியிற்கனுப்பி நான்கு வேதம், ஆறு சாஸ்திரம், அறுபத்திநான்கு கலைக்கியானம், முப்பத்திரண்டு உபநிடதம், ரத சாரத்தியம், யானையேற்றம் குதிரை யேற்றம் மற்றுமுண்டான ஆயுத பரிக்ஷைகளும், சகல கல்வி வித்தைகளுங் கற்பித்து, பட்டாபிஷேக முடிசூட்டி, சகலரும் பூலோக தெய்வேந்திர னென்று கூற, மனுநீதி முறைமை தவறாது இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்துவரும்போது, தெய்வலோகத்தில் சுக்கிரபகவானும், அசுரர்களும், தேவர்களும் அப்பட்டணத்துக்கு இந்திர அவதார நல்லூரென்று பெயரிட்டு இந்திரசேகர மஹாராஜனென யாவர்களும் நன்கு மதிக்கப்பெற்றிருக்கும்போது அசுரர்களுக்கும், தேவர்களுக்கும் யுத்தம் நடந்து, தேவர்களால் அசுரர்களை ஜெயிக்க முடியாமலும், தெய்வலோகம் எங்கும் அசுரர் சஞ்சாரமாகவே யிருப்பதை நாரத முனிவர் கண்டு, பூலோகத்திற்கு வந்து கொச்சடையப்பன் குமாரனாகிய இந்திராதிசேகர ராஜன் கொலுமுகத்திற்கு வரவும், அரசன் எதிர்சென்று நாரதரை அதிக வணக்கத்தோடழைத்துவந்து சிம்மாசனமிட்டு உட்காரச்செய்து, சுவாமி! அடியேனிடம் எழுந்தருளிய காரணம் யாதோவென்றும், தங்களைக் காணவே அடியேன் மகா பாக்கியம் பெற்றேனென்றும் அஞ்சலி வந்தனத்தோடு கைகட்டிக்கொண்டு நிற்கும்சமயத்தில் நாரத மகா முனிவர் சொல்லுவார் ; வாரும் பிள்ளாய் இந்திராதிசேகர மஹாராஜனே ! இதற்குமுன் பூலோகத்திலே இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்திருந்த சூரியகுல ராஜாக்கள் பூலோகத்தில் மனுநீதி தவறாமலும், தேவபக்தி மறவாமலும் இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்கிறதாக கேள்வியுற்று உம்மிடம் வந்தோம். தெய்வலோகத்திற்கு இராஜாவாயிருந்த தெய்வேந்திர மஹாராஜனுக்கு ஈஸ்வர சாபத்தினால் பூலோகம் வந்துசேர்ந்துவிட்டார். தேவலோகத்தை சுக்கிராசாரியரும், அசுரர்களும் சூழ்ந்துகொண்டார்கள். ஆகையால் உன்னுடைய வீரியமும், பராக்கிரமமும், கீர்த்தியும் பிரஸ்தாபப்பட்டிருக்கிறது. முற்காலத்தில் சூரியகுல இராஜாக்களா யிருந்தவர்கள் தெய்வலோகத்திற்கு ஏதாவது அனர்த்தம் வருமாகில், அதை

தீர்த்து தேவர்களுடைய அனுக்கிரகம் பெற்றிருக்கிறார்கள். உம்மைப் பார்க்கும்போது தெய்வேந்திர இராஜனுடைய அம்சமும், அழகும் பொருந்தி யிருப்பதால், இப்போது தேவர்களுடைய இம்சையைத் தீர்த்து தேவர்களைக் காப்பாற்றவேண்டுமென்று நாரத மஹா முனிவர் சொல்ல, இந்திராதிசேகர மஹாராஜன் சொல்லுவார். வாருமையா நாரத மஹா முனீஸ்வரரே! பரமேஸ்வரி கடாக்ஷத்தினாலும், சகல தேவதைகளின் அனுக்கிரகத்தினாலும் தங்களுடைய ஆசீர்வாதத்தினாலும் அசுரர்களைச் சங்காரஞ் செய்து தேவலோகத்தை நிலை நிறுத்துகிறேன், ஆனால்அசுர சங்காரம் முடியும்பரியந்தம் என்னுடைய ரதத்தினிடமாகவே தாங்கள்வீற்றிருந்து அசுரர்களுடைய மாயா விநோதங்களை அடிக்கடி தெரியப்படுத்துங்களென்று இந்திராதிசேகர மஹாராஜன் சொல்லிவிட்டு, தனது வாசற் புரோகிதரை அழைத்து நல்ல முகூர்த்தம் பார்த்து, ராணுவ வீரர்களையும் அழைத்துக்கொண்டு, நாரதரை தனது ரதத்தின்மேலிருக்கச் செய்து தானும் ரதமேறி தேவலோகம்போய்ச் சேர்ந்து அசுரர்களைச் சங்காரஞ்செய்து, தேவர்களும், தேவகன்னியர்களும் சப்தரிஷிகளும், அஷ்டதிக்கு பாலர்களும், நவக்கிரகாதிகளும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் சூழத் தேவர்கள் பூமாரிபொழிய, தேவதுந்திமி முழங்க, ரம்பை, மேனகை, ஊர்வசி, திலோர்த்தமை பரத நாட்டியமாட, சப்த கன்னியர்கள் ஆலாத்தி யேந்த, கின்னரர், கிம்புருடர், கருடகாந்தர்வர், சித்தவித்தியாதரர் வாழ்த்த தேவலோகத்தைவிட்டு சத்தியலோகத்துக்கு நாரதரை வழிகூட்டிக்கொண்டு சத்தியலோகமுங் கைக்கொண்டு, கைலாயத்திற்கு வந்து ஈஸ்வரர், மகாவிஷ்ணு, பிரம்மதேவர், சகல தேவதைகளும் புடைசூழ, மகாவிஷ்ணுவினுடைய சக்ராயுதமும் பெற்று, திரிபு வன சக்ரவர்த்தியென பட்டாபிஷேகஞ் செய்துக்கொண்டு, பூலோகத்திற்கு வந்து திரிபுவன சக்ரவர்த்தியா ரெனவும், இந்திராதி நல்லூரா ரெனவும், தேவலோகத்திற் கொப்பாகிய தானிருக்கும்பட்டணமும் அமராபதி பட்டணத்தைப்போ லிருக்கவேண்டு மென்கிற எண்ணமுடையவராய் ஒரு திசைக்கு ஒரு யோசனை தூரமாக, நான்கு திசைக்கும் நான்கு யோசனைதூரம் பட்டணமா யேற்படுத்தி, மாடகூடம் மேல்மாடி உப்பரிக்கைகளும், ரத்தின கசிதமா யுண்டுபண்ணி, ஒரு வீதிக்குச் சிவாலயம் ௭, விஷ்ணுவாலயம் ௮, இவ்விதமாக ஒரு திசைக்கு ௮௰௨ வீதிகளும், ௨௱௨௰௪ சிவாலயமும், ௱௮ திருப்பதியும், ரத்தின மிழைத்த கோபுரமும், பூரண சொர்ணக் கும்பங்களும்,

ஆகாயத்தை யளாவிய படடணத்தில், பிர்ம க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் யென்று சொல்லப்பட்ட நான்கு ஜாதியரும் அளவில்லா மலும், வருணாசிரமத் தாழ்வு நேரிடாமலும், பட்டணத்தைச் சுற்றி அகழ்கள், சந்தண விருக்ஷம், சாம்பிருணி, குங்குமம், பலா, தேக்கு, புன்னை, மகிழ், பாரிஜாத விருக்ஷம், தென்னை, கமுகு, வாழை எலுமிச்சை, நாரத்தை, வில்வ முதலான பல விருக்ஷங்களும், நந்த வனத்தில் சகல புஷ்பஜாதிகளும் தாழ்வில்லாமற்படிக்கும், செங்கழ நீர் ஓடைகளும், தாமரைத் தடாகங்களும், வெண்தாமரை, செந்தா மரை, அல்லி, அசோகு, குமுதம், கருநெய்தல், வெண்ணெய்தல், முதலியன பிரகாசிக்க, தெய்வேந்திரனுடைய அமராபதி பட்ட ணத்திலுள்ள தேவர்கள், சப்தரிஷிகள், சப்த கன்னிகள் முதலான தேவதைகளும், இந்திர அவதார நல்லூர்ப் பட்டணத்திலிருக்கிற பாரிஜாத புஷ்பங்களையும் திவ்ய சுகந்தங்களையும் எடுத்துக்கொண்டு போய்த் தரித்துக்கொள்வார்கள். இப்படி திரிபுவன சக்கிரவர்த்தி யாய் வெகுநாள் வரைக்கும் தெய்வேந்திரன் இராச்சியபரிபாலனம் பண்ணித் தேவலோகம் போய்ச்சேர்ந்தான். இப்பால் அனேகம் இராஜாக்கள் அரசாட்சிசெய்து சென்றபிறகு இந்திர அவதார நல் லூர்ப்பட்டணத்தில் காராளவம்பிசத்தில் இராஜேந்திரன், மாரன், கருத்தரிந்து முடித்தானென்று மூன்றுபெயர் பிறந்து இந்திர அவ தார நல்லூரில் மாரனும் மேற்பாரிசப் பட்டணத்தில் இராஜேந்திர னும் வடமேற்கு மூலையில் கருத்தறிந்து முடித்தானும் மனைகட்டி வாழ்ந்திருக்கும்போது இந்திர அவதார நல்லூரில் இருந்த மாரன் அன்னக்கொடி கட்டிக்கொண்டு அகுதி பரதேசிகளுக்கும் ஏழைக ளுக்கும் இளைத்துவந்திருப்பவர்களுக்கும் இச்சித்தபடி அன்னம் கொடுத்துக்கொண்டிருக்கும்போது சிவசோதனையினால் மழையில் லாமல் க்ஷாமகாலம் நேட்டிடிருக்க சிவன் பரிசோதிக்கப் புறப் பட்டுச சங்கமரைப்போல் ரூபமெடுத்துக்கொண்டு வந்து அன்னம் கேட்க சிவன் இச்சித்தபடிக்கு மாரன் அன்னம் படைத்துத் திருப்தி செய்ய சிவன் காளகண்ட திரிநேத்திரராய்ப் பிரசன்னராகிக் காக்ஷி கொடுத்து இளையான் இளையான் மாரனென்று கூறி சந்தோஷித்து கைலாயத்திற்கு அழைத்துச் சென்றுவிட்டனர்.

இப்பால் இராஜேந்திரனும் கருத்தறிந்து முடித்தானும் சிவபக் தனுகவிருந்து இந்திர அவதார நல்லூர்ப்பட்டணத்தின் வடமேற்கு மூலையில் இருக்கிற நாகமுகுந்தரையும் நாகபுஷ்கரணியையும் தரிசித்

துக்கொண்டு அதிற்சேர்ந்த சிவாலயம் விஷ்ணுவாலயங்களில் தொண்டுசெய்துகொண்டு வருகையில் நாகபுஷ்கரணி தீர்த்தக்கரையின் முன்பாக இருக்கிற நாகமுகுந்தருக்கு காராம்பசு கமலேப்பசுவின் பால்கறந்து சுவாமி சிரசின்பேரில் அபிஷேகஞ்செய்துவருகிறவழக்கப்படி ஒருதினத்தில் காராம்பசுவின் பால் கறந்தவன் கன்றைப்பிடித்துக் காலில் இருக்கிக் கட்டியதினிமித்தம் கன்றின் கழுத்து கயிரினல் இருக்குணடு கன்று இறந்துவிட்டது. பசுவின் கன்றைக்கொன்றுவிட்டானென்று அங்கிருந்தவர் வாய்விட்டலறிய சப்தம் சுவாமி திருச்செவியில் விழுந்து கிழக்குமுகமா யிருந்தவர் மேற்குமுகமாய் உக்கிரருத்திரகளைச் சுயம்புவாய் விளங்கிப்பார்த்தமாத்திரத்தில் கருத்தறிந்து முடித்தவன் பட்டணத்தில் மண்மாரி பொழிந்தது. கருத்தறிந்து முடித்தானும் சுவாமியோடு ஐக்கியமாய் விட்டனன்.

இப்பால் இராஜேந்திரரும் மகாபயத்தோடு பத்தியாயிருந்து தேவாலயங்களை விசாரணைசெய்துவந்தார். பிறகு மகிழ்குணநாதன் கரியமாணிக்கம்பிள்ளை ஆகிய இருவர்களிடம் மேற்கூறிய தேவாலய விசாரணைகளை ஒப்புவித்து இராஜேந்திரன் தெய்வலோக பதவியடைந்தான். அவர்கள் விசாரணைபுரிந்துகொண்டு அரமால்கணக்கு எழுதிவந்தவர்கள். அவர்கள் இருக்கிறபோது இராஜசிஷ்டிரமும், க்ஷாமகாலமும் ஏற்பட்டு சிவாலயங்களும் சேதமடைந்து ஆலயங்களிலிருக்கிற ஆபரணம் உடைகள் யாவும் இழக்கலாயிற்று. இந்திர அவதார நல்லூர் இராஜேந்திரர், வேணுமதனகோபாலகரிய மாணிக்கர் ஆலயங்களும், அதைச்சேர்ந்த ஆலயங்களும், திருச்சாத்தூர் சந்திரசேகரராலயமும், நாகமுகுந்தராலயமும், மருதப்பராலயமும், பாலாற்றின் கரையிலிருந்த ஆலயங்களில் அடைப்பட்டு எடுத்துக்கொண்டு போனதுபோக மகாமாதிசபரி மங்கலருடைய ஆலயமும், மங்கல விநாயகர் ஆலயமும், இவைகளுக்குள்ள உடைமுதல் ஆபரணம் கருவேலங்களும், இந்திர அவதார நல்லூர் மதனகோபாலப் பெருமாள் ஆலயத்துக்குள்ளே கருத்தறிந்து முடித்தான் கட்டிய பளிங்கு மாமண்டபத்தின் அறையிலும், போக்கிலும், தாம்பிரப்பட்டய மிருக்கிறது. கோவில் நெருபாக்கியன், அனந்தசேகர தீக்ஷதர், மதன கோபால தீக்ஷதர், நாராயண சதானந்த சோளீஸ்பரர், வெங்கிடாசல தீக்ஷதர், சுந்தர மகிழ்குணநாத நம்பியார், ஆனந்த சிவநம்பி

யார், நமசிவாய சடாக்ஷர தம்பிரான், சிவாயகுரு தம்பிரான், வால சந்யாசியர் முதல் நெருபாக்கியன், கெபடபத்தர், கெங்காதரபத்தர், வயிரவ பண்டாரம், முதலாகிய சில சிப்பந்திகளு மிருந்தார்கள். அனந்தசேகர தீக்ஷிதர் அவர்களிடம் கருவேலக் கணக்கைக் கொடுத்து அவர்கள் கணக்குகளும், தனது பதார்த்தங்களும், வயிரவ சுவாமி கோவில் அறையில் வைத்து அவர்களே பார்வையிட்டு வருகிறது. அவர்களிடம் திரிபுவன சக்கரவர்த்தி நாள்முதல் சுவாமிகளுக்கு சாத்துப்படி ஆபரணாதிகள் முதலானவகை விபரப்பட்டயங்களும், ஆதிசக்கணக்குகளும் வயிரவசுவாமி கோவில் அறையில் அவர்கள் கையிருப்பா யிருந்தது. பெருமாள் கோவில் சாமி இடகலை அர்த்தமண்டப வடநிலைத்தூண் ஒரு முழத்திற்கு அப்பால் போயிருப்பதால் க-வ கோடி சொர்னப் பண சொர்ன விக்கிரகங்கள், முதலானதும், மாணிக்கக் கோர்வை ஜோடி உ௱அ, வச்சிரப் பதக்கம், மரகதப் பதக்கம் ஜோடி கூ௰அ, பளிங்கு மாமண்டபம் அறையில் சொர்னக் குத்துவிளக்கு ௩௱௯௰அ, சொர்னக்குடம் ௬௱அ௰, தங்கத்தண்டியல், பாடம், சக்கிராயுதம், ஈட்டி, பெரியம்பு வேலாயுதம், வெண்சாமரம், ஆலவட்டம், முத்துக்குடை, பவளக் குடைகளுமிருக்கிறது. பொற்றெப்பக்குளத்திற்கு தெற்கு படித்துறை மண்டபத்தில் வெங்கலரதம் க, வயிரத்தேர் ௩, வயிரத் தெற்கு மண்டபத்தில் வாகனம், கோவில் விருதுகளுமிருக்கிறது. சாமணகோவில், தெருநாச்சியார் கோவில் பள்ளியறைப் போக்கில் முசுகுந்த சக்கிரவர்த்தியினால் அளித்த ஆபரணங்களுமிருக்கிறது. விருதில் இராஜாக்கள் செய்து சாத்திய ஆபரணங்களுமிருக்கிறது. இராஜேந்திரர் கோவிலுக்கு இடையிலிருக்கிற கருவேலமண்டபம் அறைக்குள் திரிபுவன சக்கிரவர்த்தி இராஜேந்திரருக்குச் சாத்திய ஆபரணங்களுமிருக்கிறது. தீர்த்தக்குடம், குத்துவிளக்கு, உடை முதலானவைகளுமிருப்பதை சுவாமிக்கு எடுத்துச் சாத்தவேண்டா மென்ற கொள்கை. அறையினிடமாகத்தானே இருக்கிறது. எடுத்துச் சாத்துகிறதில்லை, நாகபுஷ்கர தீர்த்தக்கரை நாகமுகுந்தர் ஆலயத்துக்கு வட பாரிசத்தில் சபாபதி கோவில் அறைப்போக்கில் எழுநூறுகோடி சொர்னப்பணமும், சுவாமி ஆபரணங்களுமிருக்கிறது. கோவிலுக்கு நிருதி மூலையில் பதினாறுகால் மண்டபத்தில் வாகனங்களும், கோவில் விருதுகளுமிருக்கிறது. பெருமாள் கோவில் அறைப்போக்கில் திரிபுவன சக்கிரவர்த்தியினால் செய்துவைத்த ஆப

ரணங்களுமிருக்கிறது. திருச்சாத்தூர் சந்திரசேகரர் தக்ஷிண திசை ஒன்பது முழத்தூரத்தில் ௰௨ கோடி சொர்னப்பணமும், திரிபுவன சக்கிரவர்த்தியாலமைத்துவைத்த திரவியமும், சந்திரசேகரர் ஆலயத்துக்கு வடமேற்கு மூலையிலிருக்கிற வயிரவசுவாமி அறையில் சொர்னவாகனம், வெள்ளிவாகனம், சுவாமி ஆபரணம், உடை முதலியவைகளுமிருக்கிறது. திருவேலங்காட்டர் திருவருப்புக்கு ஈசானியப்போக்கில் சுவாமி ஆபரணம், உடைக்கலம், கருவேலங்களும், திரவியமும், வாலை சந்நியாசியர் கைக்கணக்கு மிருக்கிறது. இருநூற்று இருபத்துநாலு சிவாலயங்களுக்கும், நூத்தியெட்டு விஷ்ணுவாலயங்களுக்கும், நெருபாகியன் முதன்மையாகக் கொண்டு படித்தரக் கட்டளைக்கு இளசைமாரனிருக்கும்போது இளையான்குடி பெருநான் செல்லைக்குட்பட்ட நிலம் என்ன விளைகிறதோ அதை ஆறுபங்கிட்டு, குடிகளுக்கு ஐந்துபோக ஒரு பங்கை சுவாமிக்குப் படித்தரஞ்செய்து வருகிறது. இந்தப்பிரகாரம் இளையான் குடி மாரன்குடியைச் சேர்ந்த கிராமம் ௬௰, இந்த அறுபது கிராமத்திற்கும் பெயர், தாசிமார்தெரு, ஊரணிக்கறை, பிள்ளையார் கோவில், முன்னுதாகக் கல்நாட்டிப்பட்டயம் சாத்தி இருக்கிறது. நெருபாகியன் இடத்தில் கோவில் பட்டயம் சாதன ஆதாய சிலவு கணக்குகளுமிருக்கிறது, தாசிமார் தெரு ஊரணிப்பிள்ளையார் கோவிலுக்குக் கிழக்கே இருக்கிறது. பெருமாள் கோவிலுக்கு மேற்கே தாமரைத் தடாகமும், தென்கரைற கீழ்க்கறையிலும் ஷை கோவில் நெருபாகியன், அனந்த சேகரதீக்ஷதர், வெங்கிடாசலபதி தீக்ஷதர் மகன் கொபால தீக்ஷதர், நாராயண சதாநந்த சோளீஸ்பரர், சுந்தரமகிழ் குணநாத நம்பியார், நல்லுடைய நம்பியார், ஆனந்தசிவாலய நம்பியார், அக்கிராரங்களும், வடகறையில் நமசிவாய சடாக்ஷரதம்பிரான், சிவாயகுரு தம்பிரான், வாலசந்யாசியர், கெவுடபத்தர், கங்காதரப்பத்தர், வயிரவ பண்டாரர் முதலான சிப்பந்தி தெருக்களும் தாசிமார் தெரு, ஊரணி உள் கட்டுக் கிணற்றினுள்ளே சிவகாரியங்களுக்கெல்லாம் எழுதிவைத்த தாம்பிரப்பட்டயமும், திரவியமுமிருக்கிறது. இளையான்குடி மதனகோபால் பெருமாள் திருவிருப்பு இடகலை அறைப்போக்கில் கணக்குச் சுருணையுமிருக்கிறது. மருதப்பர் கோவில்வாசி வீதி தீர்த்தம் உட்படித் துறையாணிக்கு ஈசானிய திசையில் முன்னொருகாலத்தில் பதினெண் சித்தர்களும் கூடி ஒன்றுக்கொன்று வாதித்துக்கொண்டு சித்திவித்தியாகரணம் பாரா

ட்டினதில் மாத்து நிருத்திச் சொல்லக்கூடாத சொர்னக்கட்டிகள் பாதாளத்தில் இருக்கிறதென்றும் சித்துமூலமாய் மருதப்பரிருக்கிற வூரைச்சுற்றி அனேக மூலிகையால் உண்டாயிற்றென்றும் வாலசந்யாசியர் திருவிளம்பரத்தின்படி ஸ்தலபுராணங்களும், இருப்புத்திட்டக் கணக்குகளும், கரியமாணிக்கம் பிள்ளை யதாஸ்துப்படி இளசைமாரன், இராஜேந்திரன். கருத்தறிந்து முடித்தான், மதுரைக்குமேல் ஏழாயிரம்படையிலிருக்கும் காமாக்ஷிநாதப்பிள்ளை மகன் சோலியநாதன், பிரஜனவ நாதன், கரியநெடுமால் பிள்ளைதான், கணக்கு நெருபாகியன்.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# இளையான்குடி மாரநாயனர் சரித்திரம்.

---

## விருத்தம்.

மன்னியவேளாண் டொன்மை இளசைமாரன்
வறுமையா லுள்ளமிக மயங்கிநீட
முன்னருநல்விருண் மழையிலுண்டிக்காக
யும்பர்பிரான் றனச்சுவயலுற்று நல்குஞ்
செந்நெல் முளையமுது மனையலக்காலாக்கிச்
சிறுபயிறின் கரியமுது திருந்தச்செய்து
பன்னலருமுண வருந்தற் கெழுந்தசோதி
பரலோக முழுதாண்ட பான்மைதானே.

இளையான்குடியென்னு மூரிலே வேளாளர் குலத்திலே எத்தொழிலிலும் சிறந்த வேளாண்மைத் தொழிலால் குற்றமற்ற அளவிறந்த பாக்கியத்தையும், சிவனடியார்கள்மேல் முழுமையும் பதிந்த அன்புகொண்ட சிந்தையும், உடையவராகிய மாரனார் என்பவர் ஒருவரிருந்தார். அவர் தம்முடைய கிரகத்திற்கு வரும் சிவபத்தர்கள் எந்த வர்ணத்தாராயினும் உண்மையாகிய அன்போடு அவர்களை எதி

ர்க்கொண்டு அஞ்சலிசெய்து இன்சொற்களைச் சொல்லி வீட்டிற் கழைத்துப்போய் பாதப்பிரசரணஞ்செய்து ஆசனத்திலிருத்திச் சைவாகம விதிப்படி அருச்சித்துப் பின் புகைப்பு, இனிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு என்கிற அறுவகைச்சுவையுடன் வாய், நக்கல், பருகல், உண்ணல், திண்ணல் என்னும் நான்கிற்கும் விஷயமாயுள்ள உணவுகளை அவர் இஷ்டப்படி அமுது செய்விப்பார். இப்படித் தினந்தோறும் மகேஸ்வர பூஜை புரிதலாகிய சிவபுண்ணியத்தினல் ஐசுவரியம் அபிவிர்த்தியாக அவர் குபேரனைப்போன்று வாழ்ந்துவந்தார். இப்படி இருக்கும் காலத்தில் பரமசிவனுர் அவ்விளையான்குடி மாரநாயனுர் இருந்த செய்கை, செல்வம் வந்தகாலத்திலன்றி, வறுமை காலத்திலும் தளர்ந்து செய்யவல்லவர் என்பதையும், தாம்நல்லோர்களுக்கு வறுமையுண்டாக்குதல் அவர்கள் நலத்தின்பொருட்டே என்பதையும், அந்த நலம் இம்மையிலேயே பலிக்குமென்பதையும், அக்கருத்தறியாது சிறந்த புண்ணியம் செய்த நமக்கு கடவுள் இடர் செய்தாரென்று அவரை நோகுதல் பழுதாம் என்பதையும், பிறருக்குத் தெரிவித்து உய்விக்கும் பொருட்டு திருவுளங்கொண்டு அந்நாயனுரிடத்தில் உள்ள செல்வமெல்லாம் நாடோறும் சுருங்கிவறுமை எய்தும்படி அருள்செய்தார். அப்படிக்குச் செல்வம் சுருங்கவும் நாயனுர் மகேஸ்வர பூஜையிலே பதிந்த தம்முடைய மனம் சிறிதும் குன்றுதலின்றி தம்மிடத்திலுள்ள நிலங்கள் முதலியவற்றை விற்றும், தம்மையும் விற்றுவிடத்தக்க அவ்வளவு கடன்களை வாங்கியும் முன்போலவே தர்மம் செய்யும் திருப்பணியை விடாது புரிந்து வந்தனர். அப்படி இருக்கும்போது அவர் மழைகாலத்திலே மழைபெய்கின்ற ஒருநாள் இரவில் நெடுநேரம் எதிர்பார்த்திருந்தும் ஒருவருடைய உதவியும் இல்லாமல் பகல் முழுவதும் போஜனம் செய்யாமல் பசி அதிகப்பட்டு தன் வீட்டுக் கதவைப் பூட்டிக்கொண்டு வீட்டினுள்ளே மாரநாயனுர் இருக்கும் தருணத்தில் கைலாசபதியானவர் சைவமதவேடங்கொண்டு எழுந்தருளிவந்து கதவைத் தட்டி அழைக்க நாயனுர் கதவைத் திறந்து அவரை உள்ளே அழைத்துக்கொண்டுபோய் மழையினுலே நனைந்த அவருடைய திருமேனியை வஸ்திரங்கொண்டு துடைத்து இருப்பதற்கு இடங்கொடுத்து அவருக்கு அமுதூட்டவேண்டுமென்னுமாசை மிகுதியால் தம்முடைய மனைவியாரை நோக்கி இந்த சைவர் மிகவும் பசித்துவந்திருக்கிறுர். நம

க்கே போஜனத்திற்கு ஒன்றுமில்லையே ஆயினும் இவருக்கு எப்படியும் அன்னங்கொடுக்க வேண்டுமே இதற்கு என்ன செய்வோமென்ருர். அதற்கு மனைவியார், வீட்டிலே ஒரு பதார்த்தங்களுமில்லை, அயலார்களும் இனி உதவமாட்டார்கள். நெடுநேரமாயிற்று அரிசி கடன் கேட்பதற்கு வேறு இடமில்லை. பாவியாகிய நான் இதற்கு என்ன செய்வேன் என்று சொல்லி, பின்பு இன்று பகற்காலத்திலே வயலில் விதைக்கப்பட்ட ஈரத்தால் முன்னமே முளைத்திருக்கின்ற நெல்லை வாரிக்கொண்டுவந்தால் இயன்றமட்டும் சோறு சமைக்கலாம். இதுவேயன்றி வேறெருரு வழியுமறியேனென்று சொல்லித் துக்கித்தாள். இந்த வார்த்தையைக்கேட்ட இளையான்குடி மாறநாயனுர் மனமகிழ்ந்து அதற்கு உடன்பட்டுஅதிகமாக மழைபொழிகின்ற மகா அந்தகாரமாகிய அர்த்த இராத்திரியிலே ஒரு பெருங்கூடையைத் தலையில் கவிழ்த்துக்கொண்டு காலினலே தடவிக் குறிவழியே தம்முடைய வயலிற்சென்று அதிலே அதிக மழையினுலே நீர்மேல் மிதக்கும் நெல்முளைகளைக் கையினுலே கோலிவாரிக் கூடைநிறைய இட்டுத் தலையிலே வைத்துச் சுமந்துகொண்டு சீக்கிரத்தில் திரும்பி வந்தனர். அவரை எதிர்பார்த்துக்கொண்டு வாசலில் நின்ற மனைவியார் மனக்களிப்புடனே அந்த நெல்முளையை வாங்கிச் சேறு போகும்படி நீரினுலே கழுவிப் பின்பு தம்முடைய பிராணநாயகரை நோக்கி அடுப்பிலே நெருப்பு மூட்டுவதற்கு விறகு இல்லையே என்று சொல்ல அவர் பலமாயிருக்கின்ற வீட்டின் மேற்கூரையிலுள்ள வரிச்சுகளை அறுத்து விழ்த்தினுர். மனைவியார் அவைகளை முறித்து அடுப்பிலே வைத்து நெல் ஈரத்தைப் போக்கி வறுத்து அரிசியாக்கி நீர் வார்த்துக் காய்ந்திருக்கிற உலையில் அதை யிட்டுச் சோருக்கித் தம்முடைய நாயகனுரைப்பார்த்து இனி கறிக்கென்ன செய்வோமென்ருள். உடனே நாயனுர் புறக்கடைத் தோட்டத்திற்குச் சென்று குழியினின்று மேற்படாத சிறுபயிர்களைக் கையினுலே தடவிப்பிடுங்கிக்கொண்டுவந்து கறி சமைக்கும்படி கொடுக்க மனைவியார் அவைகளை வாங்கி ஆய்ந்து நீரினுலே கழுவித் தமது சாமார்த்தியத்தினுலே வெவ்வேறு கறியமுதுகள் செய்துமுடித்து மாறநாயனுரிடம் கூறி சைவரை அமுது செய்விப்போமென்று சொன்னுள். நாயகர் நித்திரை செய்பவர்போற் காட்டிய ஐயர் சமீபத்திற்சென்று சுவாமி அமுது செய்ய எழுந்தருளவேண்டுமெ

ன்றழைக்க, அவர் ஒரு சோதிஸ்வரூபமாய் எழுந்து தோன்றினர். அதனைக்கண்ட இளையான்குடி மாறநாயனாரும், மனைவியாரும் திகைத்து நின்றார்கள். பின்பு அடியவர் அன்புக்கிரங்கும் கருணாகரரான சிவபெருமான் பார்வதி தேவியோடும் இடபாரூடராய்த் தோன்றி இளையான்குடி மாறநாயனாரை நோக்கி, அன்பனே! நம்முடைய அடியார்களை அமுதுசெய்வித்த நீயும், உன் மனைவியும் நம்முடைய பாதத்தை அடைந்து பேரின்பத்தை அனுபவியுங்களென்று திருவாய் மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினர்.

இளையான்குடி மாறநாயனார் புராணம்




**N.B** :-இப்போது இளையான்குடியில் வசிக்கும் வாலசுப்ரமண்ய பிள்ளை புத்திரன் கடம்பவனம் பிள்ளை என்பவருக்கு பெண்சாதி பிள்ளைகள் சென்றுவிட்டதினால் ஷையார் வீடு நூ ரூ பெறக்கூடியதை மாறநாயனார் பேருக்குக் கிரயம்செய்து ரிஜிஸ்தர் பதிந்து கடம்பவன சுவாமியாரும் ஷை கட்டடத்தை மடமாகக் கட்டிவைத்து இப்போது சகல அடியார்களும் வரக்கூடியதாயிருக்கிறது. ஆவணி மாதம் ௫-ந்தேதி ஆயிலிய நட்சத்திரத்தில் குரு பூஜையும் நடந்து வருகிறது.

உ

சிவமயம்.

இளையான்குடி ம-ா-ா-ஸ்ரீ, சேகப்பா குப்ப பிச்சை
அவர்களின் அருந்தவப் புத்திரசிகாமணியாகிய
முகம்மதுமீரூவெனும் இசபர சித்திபெற்ற
ஞானதேசிக சுவாமியவர்கள்

# சரித்திர சாரம்.

முத்தர்புகழ் முகம்மது றசூல் குலத்திற்
முளரிமலர்.சூழிளையான் குடியதன்னில்
சித்தர்களுந் தொழுதேத்த இல்லறத்திற்
செல்வமுடனே யிருந்து சேய்களீன்று
பத்தியொடு மெம்மதமுஞ் சமந்தானென்றே
பாரரசன்பரி யினைப்பூபற்றச் செய்தே
எத்திசையும் நிரைந்தருளால் என்றுமுள்ள
இறைசேகப்பா வொலியென் றிலங்குவோரே.

ஷை சுவாமிகள் ஆத்மசீடராகிய
நாமனூர் ஸ்ரீமான் : வீரப்ப செட்டியார் குமாரன்
பெருமாள் செட்டியா ரவர்கள் பாடிய

## திருவருட்பாமாலை.

காப்பு.

ஆழிசங்கேந்துமாய னன்பர்கட் கருளுந்தூயன்
வாழிசெங்கமலைமார்பன் மகிழ்ந்திடு மருகனை
வேழமாமுகவன் செல்வவிநாயக னிருதாள்போற்றி
ஏழையே னருட்பாமாலை யியம்புவே னியம்புவேனே.

பதினுன்குசீர்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

திருமிக வளர்ந்திடுந் தென்மதுரை நகரத்தனைச்
சேர்ந்த இளையான் குடியிலே
சேகப்பா வொலிகுலத் தீபம் பிரமாதியிற்
சீர்மாசி வளர் ஞாயிறில்
குருவான முகமதமீருவா மெங்கள் கோன்
கோகனக மலர் மாதுகள்
கூடி யருகாகவே கும்ப லக்கினமதில்
குருசிவனும் விஷ்ணு முறவே
இரண்டினிற் காரியு மிருக்கவே மூன்றினில்
ஈஸ்வரி யிலங்க நான்கில்
இயல்பானவேலனு மைந்தினில் ஞானியும்
இன்புறும் பதினென்றிலே
தருமசுரகுருராகுந் தங்கவே யுதித்தவா
சாயுஜ்ய பதவியருள்வாய்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

கெதிகிரக மாலிகா யோகமாய் விகாரியிற்
கிளராவணியிற் புதனிலே
கீர்த்தியாய்ச் சுத்தசுப மங்கள முகூர்த்தமாய்க்
கிருபையாய் முதற் பிறையிலே
மிதுன லக்கினமதில் கேதுவு மிருக்கவே
வெள்ளியு மிரண்டிலுறவே
மேலான மூன்றினில் ரவிபுதன் விளங்கவே
மெய் நான்கிலுமை தங்கவே
அதிதவக்குருவுமங் காரகனு மைந்திலே
ஆகவாறினிற் காரியும்
அழகேழில் ராகுவும் அமரச் சமைந்தநல்
அம்மையலிமா கணவனே

சதுர் மறை புகழ்முகம் மதுமீறு தவமிகத்
தழைத்தோங்க தயவு புரிவாய்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

அருந்ததியு நிகரிலா அருந்தவப் பத்தினி
அரசி அலிமாக் கிளியெனும்
ஆத்தாள் பத்தாவுமாய் ஆனயென் னருமையில்
அப்பனே செப்ப அரிய
பெருந்தவ முகம்மது மீறுவே யெங்குமே
பேர்பெற்ற பிரம குருவே
பிரியமுட னென்முகம் நோக்கியே புன்மையின்
பின்னலதிலே கிடந்த
வருந்து மடியேன் றுயர் தீர்த்துநின் னருகிலே
வாவென் றழைத் தின்பமாய்
வைத்தெனக் கருளான பரமகதி வாழ்வுமே
வாகாகவே வாஞ்சையாய்த்
தருந்தருண மிதுவலால் மறுதருண மேதையா
தயையோடு வருட்புரிகுவாய்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

தேவேந்திர னவதார மான இளையான் குடித்
தேனகரதிற் பிறந்த
தேவர்புகட்டேவனே தீராதிதீரனே
தெய்வமே வானோர்களும்
பூவலர்க ளூர்வசி மேனகை திலோர்த்தமை
புகழ்பரிஜின் ரம்பைதேவும்
போற்றிடும் பொன்னகர்க் கிறைவனே புரவலர்
பூவலர் கோவரொடன்

நாவலர்கள் ஞானிகள் ராஜரும் போற்றிடும்
நயன சிங்கார குருவே
நல்மோக்ஷ முகமதுமீருவே நடுநிலை
ஞானமணி சுடரேற்றியே
தாவியே எங்கும்யான் தற்சொருப மாகவே
சாமியே வரமருளுவாய்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே

மாரநன் னயனு ருதித்த இளையான்குடி
மாநகரதில் தோன்றிடும்
மால்முகம்மதுமீரு மாறனே வள்ளலே
மகா மகத்துவ முள்ளவா
ஆரணமதான பொருளுண்மையையு மருளியே
அத்துவித வித்தகவே
அழகாய்த் தழைத்திடச் செய்துமே அருளோடு
அறிவான அடியாருடன்
காரணமதாகவே கலந்துவிளை யாடியே
காணாத காக்ஷியெல்லாங்
கருணையுடன் கண்டிடச் செய்துயா னின்பமாய்க்
கலியாணம் செய்த அருமைத்
தாரமுடன் வாழ்ந்திடச் செய்தரும் புத்திர
சந்தானவர மருளுவாய்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

திருமாலின் அம்சமாய் ஜெகத்தினி லுதித்திடுந்
திருமாதி னருநேயனே
ஜெகமெலாம் புகழ்பெற்ற திருமூர்த்திகள் புகழ்
சின்மயானந்த சிவமே

அருமைமிகு முகம்மதுமீறுவே யன்போடு
அடியன் றனக் கிரங்கி
ஆனந்தமாகவே சுழிமுனைச் சூக்ஷ்மம்
அருளியே அலையாமலே
ஒரு நிலையில் நின்றிட உதவிசெய் தொளிர்விக்கும்
ஓங்கார வுச்சி வழிமேல்
உண்மையா யிலங்கியே நன்மையோ டுயிர்பெற
உதவி செய்வது மருமையோ
தருமமிக வையனே சன்மார்க்க மெய்யனே
தாமத மினியாகுமோ
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

நீண்டகரமுள்ளதோர் நிர்க்குண சிகாமணி
நிருபர் புகழ் கொடையாளனே
நேயனே முகம்மதுமீறுவே யருளோடு
நிஜமாகவே யிரங்கி
ஆண்டருள வேண்டுமே அழுதழுது ஏழையேன்
அஞ்சியே கெஞ்சி நின்றேன்
ஆனாலு மிப்படி யடியேனையே வெகு
அச்சத்திலே யாக்கியே
மாண்டிடச் செய்திடில் மாபாவி யென்செய்வேன்
மருகதி யாதுமில்லையே
மாயபிரப்பஞ்சத்தின் வலையையு நீக்கியே
மதனெனும் பால மதனைத்
தாண்டிடச் செய்துமே சன்மார்க்க நெறியையுந்
தடையின்றி யருட் புரிகுவாய்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே

மாதவர்க் கரசனே மன்னுதி மன்னனே
மாமகிமை பெற்றோங்கிடும்
மால்முக மதுமீறு வெனும் போக னேவுன்றன்
மலரடியி லேவாஞ்சையாய்த்
தீதறவி ழுந்துமே அஷ்டாங்க மானநற்
றிகழ்நமஸ் காரமினி தாய்ச்
செய்துகொண் டேனின்றி ருக்கணுல் நோக்கியே
சிந்தைமிசை வந்தருளுவாய்
நாதனே அந்தரங் சக்கருத் தானதை
நாட்குநா டோம்பி நிற்ப
நடுவான வழியைத்திறக்கவைத் தேகபுண்
ணுயேன்றனக்கு நல்கி
சாதமமு துண்டிடச் செய்து சரியாகவே
சாயுஜ்ய நிலையருளுவாய்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

முத்துநவ ரத்னமே முச்சுடர்த்தீபமே
முன்னின்று அருள்புரிகுவாய்
மூலக் குகைக்குளே கனல்மூட்டி யுன்னடியை
முடிசூட வருள்புரிகுவாய்
சித்தனே முத்தனே சிவகாமி நேயனே
சின்மய மருள்புரிகுவாய்
ஜெகஜோதி யேபெருந் தெளிவான மேருவே
செம்மலே தீமையறவே
அத்தனே சுத்தனே நித்தனே பத்தனு
யாளாக்கி யருள்புரிகுவாய்
அருளான துரியப்பிர காசனே வினையெலா
மறவேசெய் தருள்புரி குவாய்

சத்தியந்தவறிடாத் தருமதுரைநாதனே
சன்மார்க்க மருள்புரிகுவாய்
தந்தையேயுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

மாரியில்லாமலே வருந்துநாட் களில்மழை
வருவிக்க வரமீந்தவா
மாயாவதாரமாய் வந்திடும் மன்னனே
மாதவர்க் கொருதீபமே
சீரியர்முகம்மது மீறுவே பேரருட்
செல்வமே மகிமையோடிச்
சிறியேன் முகந்தனைச் சீக்கிரம் நோக்கியே
தேன்போலு மொழி பேசிடும்
பூரித்த தனமாக ராகின்ற வேசிகள்
பொய்வலையு ளாக்காயலே
புகழ்பெற்ற வேதாந்த மானபரி பூரணப்
போதத்திலே பூர்த்தியாய்ச்
சாருதற்கேயருட் புரியவிது தருணமே
சந்தோஷமா யருளுவாய்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

பாலிலாப் பசுக்களுக் கேயறமு மீந்திடும்
பாக்கியக் கரமதனினல்
பாங்காய்த் தடவியே பாலமுத மீந்திடும்
பாற்கடலிலே பசுமைசேர்
ஆலிலையி லேதுயில் ஸ்ரீரங்கநாதனே
அஷ்ட லக்ஷ்மி போற்றிடும்
அப்பனே முகம்மது மீறுவே யன்போடும்
அடியேன் றனக் கிரங்கி

சீலமுட னேர்மையாய்ச் சிற்சபைக் கேகிடச்
சீரான பாதை காட்டிச்
செல்வமிகு மோக்ஷநற் க்ஷேத்திரம் புகநலஞ்
செய்துவிடுவா யெங்குமே
சாலவு நிறைந்திடுந் தற்சொருப மேருவே
தாயுமைபி னருள் சேயனே
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

கணநாதர் கோவிலில் தாயாக தெங்கினைக்
கரமதனிறற் றடவியே
காய்க்கும்படிக்கருட் செய்திடுங் காரணக்
கடலென விளங்குமினிய
குணமான முகமதை மீறுவே யெங்களின்
கோதிலா தருமையான
குலமெலாம் நன்றாய்த் தழைத்திடச் செய்துமே
குறிப்பாக வேயானுமே
மணஞ்செய்த கற்புள்ள மாதுடன் அருமையாய்
மக்கள்மிக வும்பெற்றிட
வரமருட் புரிந்துமென் விழிமருவை மாற்றியே
மனக்கவலைதனை நீக்கியே
தனதாக ஏழையேன் சாற்றிடும்படியெலாம்
சகல சம்பத்து மருள்வாய்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

வறுமைபிணி நோய்களால்வாடியே வந்திடும்
மாந்தர்கட் கேயருமையாய்
மனமது விரங்கியே வாஞ்சையுட னேயருள்
வாக்கருளி யேயவர்களின்

சிறுமைபிணி நோய்களைச் சிதறிடச் செய்துமே
செல்வ நன்மையு மீந்திடுந்
தேவர்புகழ் முகம்மது மீருவேசிரொடுஞ்
சேயன் றனக்கிரங்கி
அறிவுபுகழீந்துநல் லானந்த மோனமாய்
அழியாம லேவாழ்ந்திடும்
ஆதியடியாருடன் அன்பொடுங் கூட்டியே
அத்துவித மார்க்கத்திலே
சரியாக சேர்த்துமே தனியாக நின்றிடச்
சரமதனை யேதருகுவாய்
தந்தையே யுநதன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

காரிருள் நிறைந்திடுங் காண்டா வனத்திலே
கருணையொடு காத்திருந்த
கௌதம ரிஷிக்கருட் காக்ஷிக ளளித்துமே
கதிமேவ வேசெய்திடுந்
தீரனே முகம்மது மீருவே சீக்கிரஞ்
திருக்கண்ணி னல்நோக்கியே
தீயகொடு செய்கைகள் யாவையும் போக்கியே
சீரான ஞான வழியில்
பூரணமதாகவே போகவுஞ் செய்துமே
புண்ணியம தான கிருபைப்
பொருளோடு சேர்த்துநல் லருளாக வென்றுமே
புனிதகுண வாழ்வருளுவாய்
சாரியாய் ரிஷிமுனிவர் சித்தர்நவ நாதருந்
தயவுசெய்யென வணங்குந்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.




மயிலாடுஞ் சோலையில் மகமதுநபியுமே
    மாதவ முகையதீனும்
மக்கை நபிமார்களுங் குதுபுஒலிமார்களும்
    மாகண பதிவேலனும்
ஒயிலான திருமூர்த்தி களுமுமை யாளுமே
    உருவான திருமாதுமே
உறுதியருள் வாணியுஞ் சேகப்ப வொலியுமே
    உற்சவம தாய்க்கூடியே
கயிலாய நவரத்தி னக்கொலுவி லருமையாய்க்
    கருணைமிக வேபூர்த்திடுங்
கதிமுகம் மதுமீரு வுனைவைத்து மன்னர்கள்
    கண்ணனென் றேபேரிடுந்
தைரிய வானுனது கிருபையா லென்றுமே
    தமியேனை யாண்டருளுவாய்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
    தவராஜ மகமேருவே.

மருமலர்சோலைசூழ் மதுரையைச் சேர்ந்தநல்
    வாசமுறு நாமனூரில்
மாசிலா வீரப்ப தேசிகர் செய்தவ
    மகனாக வேவந்த யான்
பெருமாள்சொலுங்கவிக் கருளொடு மிரங்கியே
    பிரியமுடனே மனதுமே
பிசகாமல் நன்னிலையி லசையாம லோர்மையாய்ப்
    பேரூன்றி யேவாழ்ந்திட
அருமையுடன் செய்குவா யகிலவிண்ணும் புகழ்
    அரியதிரு வுருவாயொளிர்
அண்ணலே முகம்மதுமீருவே சொல்லரும்
    அருந்தவத் தோர்க்கரசரே

சருகா யுலர்ந்துகண் தாரைநீ ரோடவே
சாற்றினத றிந்திரங்குந்
தந்தையே யுந்தன்செந் தாமரைத் தாட்சரண்
தவராஜ மகமேருவே.

சீட்டுக்கவி.

மதிமுகமன்னு வுந்தன் மலர்ப்பதம் போற்றியானுந்
துதிசெய்து எழுதுஞ்செய்தி சுந்தரர் பார்வைசெய்து
நதியணியீசன் வானோர் நலமுடன் யாரும் போற்றும்
அதிதவா முகம்மதமீரு அனுப்புவீர் பதில்சுவாமி.

சுந்தரவடி வமைந்து துலங்கிடும் நீண்ட கையால்
எந்தையே நீரெனக்கு எழுதிடுங் கடிதந்தன்னைச்
சிந்தை பூரித்துப் பார்த்து சிரசின்மேற் கொண்டே னன்
வந்தது பரமானந்தம் மால்முகம் மதுமீறுவே. [பாய்

உ

சிவமயம்.

இளையான்குடி ம-ா-ா-ஸ்ரீ, சேகப்பா குப்ப பிச்சை
அவர்களின் அருந்தவப் புத்திரசிகாமணியாகிய
முகம்மதுமீறுவெனும் இசபர சித்திபெற்ற
ஞானதேசிக சுவாமிகண்மீது
பெருமாள் செட்டியா ரவர்கள் பாடிய

## எந்நாட்கண்ணி.

சித்திமுத்தி பெற்றோங்கும் சேகப்பா நாதனரும்
பௌத்திரன் முகம்மதுமீறு பதந்தொழுவ தெந்நாளோ. 1
செப்பரிய நற்குணமுஞ் சீர்புகழும் பெற்றோங்குங்
குப்ப பிச்சை சேப்பதத்தைக் கும்பிடுவ தெந்நாளோ 2

பாத்திமா நாயகத்தின் பாலன் றனைவணங்கி
நேத்திரமும் பெற்று நிஷ்டைசெய்வ தெந்நாளோ. 3

கற்பரசித் தாயலிமாள் கணவன் றனைத் தொழுது
நற்பதத்திற் சேர்ந்து ஞானமுற லெந்நாளோ. 4

பத்திநெறியோடும் பாங்காய்க் கசிந்துருகி
நித்தனருள் பெற்று நிலைப்பதுவு மெந்நாளோ. 5

மூலக் குகைக்குள்ளே முச்சுடர் சோதியிலே
சீலவரசுசெய்து சிறந்திடுவ தெந்நாளோ. 6

மேலான வீதியிலே மெய்யாய் விளங்கிடவே
வேலாயுத மெடுத்து வினையறுப்ப தெந்நாளோ. 7

பத்தியொடு மோர்நினைவாய்ப் பரம ரகசியத்தைப்
புத்திதனில் வைத்து புகழ்பெறுவ தெந்நாளோ. 8

இருபாதை வாசியிலே ஏறியே யின்பமுடன்
ஒருமனதினோடும் முந்திருப்ப தெந்நாளோ. 9

கமகமவென் றேமணக்குங் கற்பகத்தின் சோலையிலே
அமுத மிரக்கியுண்டு ஆளாவ தெந்நாளோ. 10

புத்திக்கு மெட்டாத பூரணத்தின் மெய்யருளை
நித்தியமுமுண்டு நீடிப்ப தெந்நாளோ. 11

படிக்குப் படியேறி பரமதிரு க்ஷேத்திரத்தில்
குடியிருந்து வாழும் குறிப்பறிவ தெந்நாளோ 12

உம்பர்களும் போற்றும் ஒளிவிடுமா மண்டபத்தில்
செம்பொருளைக் கண்டு தேறுவது மெந்நாளோ. 13

அகவிருளைப் போக்கும் அருளான மெய்த்தீபம்
முகம்மது மீறுவடியை முடிதரிப்ப தெந்நாளோ. 14

எத்திசையும் போற்றும் எங்களிறை யானகுரு
முத்திதரும் வித்தினருள் மொழிகேட்ப தெந்நாளோ. 15

பத்தி நெறிமிகுந்த பரமகுரு வானசிவ
அத்தன்முகம் மதுமீறின் அடிசேர்வ தெந்நாளோ. 16

சித்தர் முத்தர் போற்றும் சிவராஜ யோகமுள
முத்தன்முகம் மதுமீறின் மோனமுற லெந்நாளோ. 17

வேதத்தின் வித்தாயவ் வித்தில் விளைந்தவருஞ்
சோதிமுகம்மதுமீறின் துணைசேர்வ தெந்நாளோ. 18

ஆதியரசாய் அம்புவியெலாம் நிறைந்த
நீதியொடுங்கூடி நிலைபெறுவ தெந்நாளோ. 19

சாதனையில் நின்றிருகண் தாரைநீ ரோடிடவே
நாதனருள்பெற்று நடுவாவ தெந்நாளோ. 20

ஓதியறிந்துணர்ந்து ஒலிமுகமத் மீறுவன்
பாதமதைப்பற்றிப் பதம்பெறுவ தெந்நாளோ. 21

நோக்கப் பலவிதமாய் நாட்டமுடன் ஞானகனை
வாக்குமனமொத்தே வணங்குவது மெந்நாளோ. 22

செப்பரிய அற்புதமாய் தேஜசஜோதியா யிலங்கும்
முப்பொருளினோடு முழங்குவது மெந்நாளோ. 23

அற்ப வுடலமதுள் அதிசயமாய் நின்றிலங்கும்
கற்பகத்தின் காக்ஷிகளைக் கண்டிடுவ தெந்நாளோ. 24

சிற்பரத்தின் மெய்வெளிக்குள் சின்மயமாய் நின்றிலகுந்
தற்பரத்தைக்கூடித் தனியாவ தெந்நாளோ 25

மண்ணுலகும் விண்ணுலகு மாயமயமா யிலங்குங்
கண்ணின்மணி யைக்கண்டு களிகூர்வ தெந்நாளோ. 26

சோலைக் குயில்போலும் சூக்ஷமுடனே பேசும்
வாலைதனைக் கண்டு வணங்குவது மெந்நாளோ. 27

மாயமதிலேசுழலு மனக்குரங்கைக் கட்டிவைத்தே
நேயனருள்பெற்று நிலைப்பதுவு மெந்நாளோ. 28

முட்டாள் தனத்தில் முழுகுகின்ற பேய்மனதை
வெட்டிவெட்டி நீராக்கி விளக்குவது மெந்நாளோ. 29

சொன்னபடி கேட்காத துஷ்டத் தனமனதை
வன்னிதனில் வைத்தெரித்து வரம்பெறுவ தெந்நாளோ. 30

உள்ளபடிநடவா தோடியுழலுகின்ற
கள்ள மனதைக் கறுக்குவது மெந்நாளோ. 31

கஞ்சமலரடியான் கணேசன் முகம்மதுமீரு
தஞ்சமென வடைந்து தவம்பெறுவ தெந்நாளோ. 32

என்னையீடேறென்ற ஈசனு மென்றுமுள
மன்னன் முகமத்மீரு நான் வரம்பெறுவ தெந்நாளோ. 33

முடிமன்னர் போற்றும் முகம்மதுமீரு வென்
வடிவேலன் றன்னை வணங்குவது மெந்நாளோ. 34

பண்ணவர்கள் போற்றும் பாதுஷா வானகுரு
கண்ணன் முகம்மத்மீருயான் கதிபெறுவ தெந்நாளோ. 35

---

எந்நாட்கண்ணி



உ
சிவமயம்.
பரமகுருவே துணை.
இஃது
இளையான்குடி காரணசேகப்பா ஒலியா அவர்களின
பௌத்திரரும், குப்ப பிச்சை யவர்களின்
புதல்வரும், ஆன்ம ஞானனந்தம் பெற்றவருமாகிய
மகாமதி முகம்மதுமீரு சாகிபவர்கண் மீது
ஷ சாகிபவர்களின் மாணவரி லொருவராகிய
தஞ்சைமா நகரைச் சார்ந்த இராஜமன்னார்குடி
ம-ா-ா-ஸ்ரீ, அ. இரத்தினம் பிள்ளையவர்கள்
சிரேஷ்ட குமாரன்
அ. இர. சுப்பிரமணியம் பிள்ளை யவர்கள் பாடிய

## குருவருளிறைஞ்சற்பாமாலை.

காப்பு.

புகழ்மிகு ஞானநெறி யுயர் வானநற் புண்ணியனு
முகம்மதுமீரு திருவடிபோற்ற முதல்வனின்பே
ரகமதுவைத்து இறைஞ்சற்பாமாலை யரைவதற்கு
பகவனுந் தூயகணபதி தும்பிரான் துணையே.

நூல்.

இந்திரன்மா நகரமென விளங்கு நல்லூ
ரிளையநக ரந்தனிலே யின்பமான
சிந்தையுட னடியருக்கா யவதாரஞ்செய்
சேகப்பா வொலிதேவர் மரபிற் ருேன்றி
வந்திலங்கு மாயாவ தாரனெங்கள்
வள்ளல்முகம் மதுமீரு மலர்ப்பாதத்தைச்
சந்ததமுஞ் சிரஞ்சூடி யடியேன் யோக
சன்மார்க்க வழியதனிற் சார்குவேனே.

சாந்தகுணந் தருசரத்தி னெறியைச் சாற்றித்
தகுயோக சாதனத்தின் வழியுங்காட்டித்
தேர்ந்தடியே னுய்வதற்குன் கமலபாத
சேவையுந்தந் தருள்புரிவாய்த் தேவதேவா
தீர்ந்துணர்வோர் விழுப்பொருளே கருணைவாழ்வே
சேகப்பா முகம்மதுமீ றாவேயின்பம்
வார்ந்தொழுகுங் கனிரசமே தித்தித்தோங்கி
வளர்ந்துலவுசெழுங்கரும்பே மணிப்பொற்குன்றே.

பிறக்கும்போ தருமையுடன் கொண்டுவந்த
பேருளாம் புண்ணியத்தின் பொருளே மோனஞ்
சிறக்குமுகம் மதுமீறா வொலியே செல்வச்
செழுஞ்சுடரே மறைமுடிவே சிறியேனை
யிறக்குமட்டு முனைமறவேன் மறவேனிந்த
ஏழைதனைச் சீர்திருத்தி யின்ப மெய்தத்
திறத்துடனின் பதமலரென் சிரமேற் சூட்டிச்
சிவலோக நல்வழியிற் சேர்க்கவேண்டும்.

சேர்க்கவே வேண்டுமுந்தன் சீர்பாதத்திற்
ஜெகத்திலே செப்பவொணாப் பொருளைச் செப்பிப்
பார்க்கவே வேண்டுமென்றன் முகத்தைப் பார்த்துப்
பராபரத்தி னிரகசியத்தைச் செவியி லூட்டிக்
கோர்க்கவே வேண்டுநவ ரசப்[illegible]மாலைக்
கோர்த்துதனை நினதுபத மலர்க்கே சாத்தக்
கார்க்கவே வேண்டுமுக மத்மீறாவே
கணபதியே யத்திமுகக் கருணை வாழ்வே.

அத்திமுக வித்தகனே வடிவேலேந்தும்
ஆறுமுகப் பெம்மானே யனைத்துமான
சத்தியொரு பாகம்வைத்த சிவனே சங்கு
சக்கரமேந்திய வாழ்வே தவம்பெற் றோங்கும்

பத்தினிதாய் அலிமாப்பெண் பத்தாவே மெய்ப்
படர்ந்தெழுந்த சுடர்க்கொழுந்தே பரமே கன்னற்
புத்தமுதே முகமதுமீ ருவேயுன்றன்
பொன்னடியெப் போதுமருட் புரிகுவாயே.

புரிகுவே னுனதுபுக ழதையே நாடிப்
புத்தியொடு பத்திவழி பாடுகொண்டு
உரிகுவே னுள்ளுரு மமிர்தந் தன்னை
யுண்டுண்டு தேக்கியே யுருக்கமாக
விரிகுவேன் முகம்மதுமீ ருவேயுன்னை
விழிகளிக்கக் கண்டுவழி தொடர்ந்து சுற்றித்
திரிகுவே னுபயபத கமலம் போற்றித்
தீர்க்கமன துடனெனைக்காப் பாற்றுவாயே.

ஆற்றுமையா வடியன்வினை யெல்லா மாற்றி
யாருமற்ற பாவியடி யேனுக்குண்மை
சாற்றுமையா சற்குருவின் வடிவாய் வந்த
தற்பரனே சாகாத செல்வந் தந்து
தேற்றுமையா முகம்மதுமீ ருவேயிந்த
செகதலத்திற் கைகண்ட தெய்வம் நீயே
மாற்றுமையா சிற்றின்ப வழியை மாற்றி
மாருத பேரின்ப வாழ்வின் வாழ்வே.

சிற்றின்பந் தனிற்சிக்கி யறிவு கெட்ட
சிறியனிவ னென்றுபல ரேசா வண்ணம்
பற்றியெனைப் பிடித்திழுத்துப் பாசமோட
பகரறிய மெய்ஞ்ஞானப் படிவங் காட்டிச்
சுற்றியலை யாமற்சும்மா விருந்து நல்ல
சுகம்பெறவே சிலநாட்க ளிருப்பா யென்ற
முற்றறிவே முகம்மதுமீ ருவேயந்த
முதன்மொழியை யுயர்மொழியாய் முன்னினேனே

முன்னிலையி லேதுமிலா மூடனேற்குன்
முடிவான தத்துவத்தின் முடிவின் சாரம்
உன்னியது தெரிந்தடங்கும் வண்ணநேரே
யுள்ளபடி யுணர்த்துவது மென்று சொல்லோ
பொன்றிகழு நவமணியே புகழே யண்ட
புவனமெலாம் பூத்தபரம் பொருளே யெங்குந்
தன்னிகரி லாதமுக மதுமீருவே
தனிப்பொருளே யருவுருவாய்த் தழைக்குந் தேவே.

அருவாகி யுருவாகித் தருவுமாகி
யரும்பாகி மலராகி மணமுமாகித்
திருவாகி வந்தவர தெய்வக் குன்றே
திருமேனி யானபரம் பரனேமாசு
மருவாத முகமதுமீ ருவேநின்பால்
மன்றுடு மடியன்மன மயக்கருத்துப்
பெருவாழ்வு தாவருவாய்த் ததியீதையா
பேசாது பேசியசற் குருவுநீயே.

குருவாகி வந்தகுலக் கொழுந்தே மூன்று
குணங்கடிவாழ்க் குணக்குன்றே குகனேசோதி
யுருவாகி வந்தபா வுருவே வுன்று
ளுகப்பாகி யெங்கெங்குஞ் சித்திபெற்றுத்
தருவாகி வந்தமுக மதுமீருவே
தவமாகுந் தவவடிவே புன்மையான
கருவாகி வந்தாலு நின்றுள்போற்றுங்
கருத்தடியேற் கருட்டனியே கருணை வாழ்வே.

தனியேயென் தற்பரமே பேரானந்த
தண்ணளியே தத்துவத்தின் மூலமான
கனியேமெய்க் கண்ணொளியே கருத்தே யெல்லாக்
காக்ஷிக்கு மேலான காக்ஷிப்பேறே

முனியேவண் முகமதுமீ ருவேமுத்தே
முத்திநெறி யறியாத மூடனேற்குன்
பனியேசற் குணமணியே மௌனஞானம்
பரமசுகப் பேறறியப் பகருவாயே.

அறியவுரு வெடுத்துலகி லலைந்தேகால
ஞக்கினைக்குட் பட்டொழியா தடக்கி யின்ப
நெறியதனி லீடுபடும் வண்ணத் தானாய்
நித்தியசித் காரணநின் மலனாய்நின்ற
குறியகலா முகமதுமீ ருசாகிப்பே
குணமாக்கி மூன்றற்ற விடமுங் காட்டி
சிறியன்மனச் சிக்கறுத்துச் சிவ சிவாநின்
சீர்பாதத் தினிலிருக்கச் செய்யாதேனோ.

ஏனென்னைப் படைத்து விட்டாய் மூடனானு
மேகாந்த நிலையதனை யறிந்திடாமல்
நானேயுன் றனைநாடி நாளுந் தேடி
நல்லவகம் பெருகிடவே நாதாந்தத்தில்
தானே தன் னையும்வணங்கித் தன்னுட்சீவ
தன்மயமாக் குவதற்குத் தடையேதையா
மானேமா முகமதுமீ ருவேஞான
மாட்சிமையா யடியேனை யாளாதென்னே.

என்னென்ன நினைந்துமன மிடைந்திடைந்து
ஏழையே னெப்படியா கினுமேயுன்றன்
பொன்னடிபொற் கமலப்பூ ரணனின்வாழ்வைப்
பூசித்து நேசித்து போற்றி நாளுந்
தன்னிலையிற் றானாகித் தன்னைத் தானாய்த்
தரிசிக்க வகைதெரிய விலையே யையா
மன்னிமகிழ் பெற்றமுகம்மதுமீருவே
மறைமொழியே பரதருவின் மலரும் பூவே.

பூங்காவே யவ்வனத்தின் மலரும் பூவே
புண்ணியமொன் றில்லாத புலையனேனும்
ஆங்காங்கெங் கென்றலைந்து வீணாட்போக்கி
ஆறிமனந் தேறிடவு மறிவொன் றின்றி
யேங்காது நின்னருகி லிருந்துமேலா
மிகபரசு காநந்த வெள்ளத் தாழ்ந்து
நீங்காத படிக்குமுக மதுமீறுவே
நிட்கா மியத்தவமுங் கல்லா தென்னே.

கல்லாத கல்விதனைக் கற்றபின்பு
காணாத காட்சி யெல்லாங் கண்டுகொண்டு
உல்லாச மாம்பதும பாதமுன்னி
யுறுதியுட னிருதயத்தி லுள்ள வாறே
யெல்லாமு மெவ்வுலகு மெம்பிரானீ
யெனத்துதிக்கு மேழைதனக் கிரங்கி யெங்குஞ்
சல்லாப முகமதுமீ றுவேயுன்றன்
சாயுச்ய சூன்யவொளி தருகுவாயே.

சூனியமாய்ச் சூனியத்தின் பொருளுமாகிச்
சூக்ஷாதி சூக்ஷமுள்ள பொருளுமாகி
ஞானியென முடிதரித்தன் பரையுங் கார்க்கு
நாயகமே முகமதுமீ றுவேயெங்குந்
தானவனா கியபாசை தன்னியவாழ்வே
தமியனைக்கை விடிற்சகியேன் சகியேன் கண்டாய்
நானென்னும் வேற்றுமையில் லாமற் சுத்த
நல்வழியைக் காட்டியரு ளுவதெந்நாளோ.

நாற்றிசையு மலைந்தலைந்து நாளைப்போக்கி
நன்மையென்றுந் தீமையென்று மறிந்திலேனான்
பாற்கடலிற் பள்ளிகொண்டாய்ப் பாரளந்தாய்ப்
பாவியடி யேன்செயலைப் பாராதேனே

மாற்றுயர்ந்த செம்பொன்னே முகமதமீரு
வள்ளலே முடிவான நிலையைக் காட்டி
பேற்றான பேரின்ப வெள்ளத்தாழ்ந்து
பெயராத படியருளிம் மனித னேற்கே.

மனிதனுய்ப் பிறந்துலகில் மோனபோத
மாறாத மயக்கத்தின் மயங்கும் வண்ணம்
முனிதனன்றே முகமதுமீ ருவேஞான
முத்திக்கு வித்தாகி முளைக்குந் தேவே
துனிதருமா கவலையற்று ணவமூ மற்றுச்
சுகமேவு முத்தர்கள்பூ சிக்குங்கோவே
புனிதனுய்ப் பூமகள்சேர் மார்பா நின்னைப்
புகழ்ந்துய்ய வடியனையாட் கொளலாகாதோ.

ஆகாதோ வடியனிட வல்லலற்றே
யந்திபக லொழியாதுன் னருளை யேத்த
வேகாதோ விருவினைக ளெல்லாம் வெந்து
வேற்றுருவ மில்லையென விளங்கி நிற்கப்
போகாதோ திரிகரண சுத்தர் முத்தர்
புகழ்ந்தேத்து முகமதுமீ ருவேசெல்வ
யோகாதோ மில்வேத ஞானசார
மொழுகமுத ரசமளிக்க வேண்டுநீயே.

அளித்திடவே வேண்டுமையா சொரூபந் தன்னை
அருளான வருளொளியே யமலவாழ்வே
சுளித்திடவே வேண்டுமறு பகையைச் சுட்டுச்
சொல்லாமற் சொன்ன மறைத்துணிவு கொண்டு
குளித்திடவே வேண்டுநின்னு னந்தவெள்ளக்
குளிர்கருணைப் பெருங்கடலிற் குளித்து நாளுங்
களித்திடவே வேண்டுமுக மதுமீருவே
கனவிடத்தும் நின்றுளைக் கருதிலேனே.

கற்குநெறி கல்லாமற் கன்னிமார்கள்
கண்வலையிற் சிக்கியுழல் கடைய னேனு
நிற்குநிலைக் கேநேசித் தெந்தநாளு
நேர்பொருந்திநின்னருளி னிலைப்பேன் சொல்லோ
சிற்குணமே சின்மயமே தெய்வக்குன்றே
செழுமணியே முழுநிதியே செல்வப் பேறே
நற்குணமே முகமதுமீ ருவேஇந்த
நாயேனைப் பாழாக்கி லென்செய்கேனே.

யாழ்ப்பட்டே னிப்பெரிய புவனமீதிற்
படைத்தளிக்கும் பரமனைப் பதந்தொழாமற்
கீழ்ப்பட்டேன் கீடமென நிலையொன் றில்லாக்
கீர்த்தியென்றே வீடுமனை மக்கட்குள்ளாய்
வீழ்ப்பட்டேன் வேதமுக மதுமீருவே
மெய்ப்பொருளே வேதாந்த வெள்ளந் தோயத்
தாழ்ப்பட்டேன் தாழ்மையுட னினைந்துன் பாத
தாமரையென் சிரமீது தரித்தே னானே.

நானேநன் னலம்பெறவே சுற்றிச் சுற்றி
நல்வினையுந் தீவினையும் விட்டொழிந்து
தானேதா னானதனி மயமேவாடித்
தட்டழிந்து திகைக்கின்ற தமியனேனைத்
தேனேநற் றெவிட்டாத கனியே சுத்தத்
தெள்ளமுதே யானந்த தேசிகா தூய்
மானேமா முகமதுமீ ருவேஞான
மாறாத நிலையிருத்தி வைத்தாட் கொள்ளே.

ஆண்டவித மறியாம லலைந்தலைந்து
யாரிடத்துஞ் சென்றுசென்று கேட்டுகேட்டும்
மாண்டமரம் போலமதி மயக்கமல்லால்
மனந்தெளிய வுபதேச மார்க்கங் காணேன்

தாண்டவமா டியசரணுதனியே வேறு
தாக்ஷியிலாத் தண்மணியே தகைமையாகப்
பூண்டபுகழ் முகமதுமீ ருவேசின்றன்
பூங்கமலச் சேவடியை நாடினேனே.

நாடினேன் சிற்சொரூப வொளியைக்கண்டு
நன்னிலையி னின்றுதரி சிக்கவென்றே
வாடினேன் வதங்கினேன் வண்மையோடு
வணங்கினேன் வெற்றிவடி வேலைப் பற்றிக்
கூடினேன் கூர்மையுடன் கூசிடாமற்
கூவினே னென்குறைக ளெல்லாங் கூறிப்
பாடினேன் முகமதுமீ ருவேசின்றாட்
பண்புடன்காத் திருந்தேனு தாரமென்றே.

ஆதார நீயன்றி யாருமுண்டோ
வானந்த முடையவனே யன்பனேனுன்
பாதார விந்தமதைப் பணிந்தவாறே
பரமபதந் தனைப்பகர்ந்து படியவைப்பாய்
வேதாந்த மெனும்வெற்றி வேலைக்கொண்ட
வித்தகனே நித்தியனே விண்ணோர் வாழ்வே
நாதாந்த முகமதுமீ ருவே சுத்த
நாட்டமுடனுனைப்பணிந்து நத்தினேனே.

உன்னையன்றி யிவ்வுலகி லுதவியில்லை
யும்பர்களுக் கரசேநல் லுண்மைநாதா
பின்னையுமென் பிதாநீயே தாயுநீயே
பிரணவத்தின் பொருளான தெய்வம் நீயே
அன்னியனென் றென்னைக்கை விட்டிடாம
லகத்திலுள சங்கற்ப மகலச்சாற்றி
மன்னவனே முகமதுமீ ருவேசுத்த
மங்களமே வந்தெனையாள் மாசிலானே.

சிற்பரமே ஞானசிவா னந்தரூபா
    சிறியனெனக் குன்னருளின் செல்வம் வேண்டும்
தற்பரமே தனிமணியே மகிழ்ந்துன் வாக்குந்
    தந்தருள்வாய் மாறாதவரமுஞ் சேர்த்துன்
பொற்பதமே கதியலது வேறுகாணேன்
    பூரணசின் மயவெளியே புவனம் யாவுங்
கற்பிதமே யல்லாது நிலையொன் றில்லைக்
    காரணவே தாந்தமுக மதுமீறுவே.

குருவருளிறைஞ்சற்பாமாலை
முற்றுப்பெற்றது.

---

## எக்காலக்கண்ணி.

திருவாகி நின்றிலகுஞ் சேகப்ப நாதரொளி
தருகாவிற் சென்று தரிசிப்ப தெக்காலம் 1

தானவன் சாயலுமாய்த் தானேதா னானவனே
மானாமுக மதுமீறு மார்க்கமுற லெக்காலம் 2

எக்கால மென்றென் றேங்கித் திரியாமன்
முக்காலமுக மதுமீறு முடிதரிப்ப தெக்காலம் 3

ஏகபராபரனை யென்னிதயத் தேநினைந்து
மோகமடக்கி நித்திய முத்திபெற லெக்காலம் 4

யானேயெனை யறிந்து என்னளவைத் தான்தெரிந்து
பானேமுக மதுமீறு பண்பெய்வ தெக்காலம் 5

சாகாக்கலைச்சார்ந்து சாயுச்சியந் தனையடைந்து
வேகாத்தலை கண்டு மெய்யறிவ தெக்காலம் 6

பார்க்குமிட மெல்லாம் பரவெளியாம் பேரொளியிற்
கார்க்குவண்ண மென்றனைநான் கண்டுணர்வ தெக்காலம் 7

பாராவிடமெல்லாம் பார்த்துத் தியக்கமுற்றுச்
சேராத சேர்க்கை விட்டுன் சீரடைவதெக்காலம் 8
வெல்லம்போற் சர்க்கரைபோல் விளங்குகின்ற மெய்ப்பொருளைச்
சொல்லாமற் சொல்லியருடோன் றவைப்ப தெக்காலம் 9
பார்த்தென் முகந்திரும்பிப் பகருமொரு மொழியைச்
சார்ந்துஜக மாயைதனைத் தள்ளிவைப்ப தெக்காலம் 10
அடிபணிந்துன் னருளாகி யன்புடனே யானுன்
படியின் படிப்பை படிப்பதினி யெக்காலம் 11
மோகித்து மாதவர் முயக்கிலழுந்தாமல்
யூகித்துன் பாதத் துடனிருப்ப தெக்காலம் 12
அக்கால மக்கால மென்றயர்ந்து போகாமன்
முக்காலு மேகபர முத்திபெற லெக்காலம் 13
நாசிநுனி யிற்றுலங்கு நல்லவனி னின்னருளால்
ஊசிமுனை ரகசியத்தை யுணர்ந்துரைப்ப தெக்காலம் 14
மானுபிமான மறப்பு நினைப் பொழிந்து
ஞானுதி ஞேயமதை நானறிவ தெக்காலம் 15
தானுகி நின்றுனது தன்மயமா கித்தமியேன்
சேனுபதிபோலச் சேர்ந்திருப்ப தெக்காலம் 16
பாழானமாயப் பதரைப் பறக்கடித்துன்
கீழானவர்களுக்குங் கீழாவ தெக்காலம் 17
பாவிசிறியேன் பரக்கவிழியாம லுனைச்
சேவித்து ஜென்மவினைத் தீர்ந்தொழிவ தெக்காலம் 18
பிணியினு லேவருந்தும் பிள்ளைநா னென்னைக்
கணியாதிருக்கிற் கடைத்தேற லெக்காலம் 19
மூச்சற்றிருந்தவிட முற்றுமறி யாதிருந்து
பேச்சற்றிருந்தவிடம் பேசுவது மெக்காலம் 20

கண்ணே கருத்தேயென் கதிக்கான காரணமென்
றெண்ணுமலெண்ணி யிறைஞ்சுவது மெக்காலம் 21

புருவத்தின் மத்தியிலே பூரணமாய்த் தோன்று
முருவெளியைக் கண்டே யுவந்திருப்ப தெக்காலம் 22

காட்டாமற் காட்டிக் கடாக்ஷித்த வுன்னருளை
மாட்டாமன் மாட்டி மகிழ்ந்திருப்ப தெக்காலம் 23

ஒட்டியொட்டா தந்த வொருபரம வுள்ளொளியை
எட்டிப்பார்த் தேகாந்த மாயிருப்ப தெக்காலம் 24

ஏகமாயெங்கணு மா யிருக்கும் பொருளைப்
பாகமாய் நின்று பகர்ந்திடுவ தெக்காலம் 25

உன்னைநம்பி னேனடியே னுள் ளபடி நின்னருளா
மின்னமுத மூட்டி யீடேற்றிவைப்ப தெக்காலம் 26

தற்பரமாய் நின்ற தனிமுதலே நாயேனுங்
கற்பமுறைபதனைக் கைக்கொள்வ தெக்காலம் 27

வல்லான் முகமதுமீ ரூவேயுன்றாட் பணிந்து
கல்லாக்கடையேன் கரைசேர்வ தெக்காலம் 28

மனக்கவலையான தென்றன் மட்டிலடக்குதற்குத்
தனக்குவமை யில்லாதான் றாள்பணிவ தெக்காலம் 29

நான்முகமு நின்றதிரு ஞானப்பரஞ் சுடரை
வான்முகமாய் நின்றுவணங்குவது மெக்காலம் 30

நாதனே புன்மைமிகு நாயினுங்கே டானவென்றன்
றீதகலநின்னைத் தெரிசிப்ப தெக்காலம் 31

விண்ணப்ப மொன்றுளது மெய்ஞ்ஞான பாலமுத
முண்ணப்பா வென்றேநின் னுளம்புரிவ தெக்காலம் 32

நண்ணப்ர சிற்போத ஞானப்பா லூட்டிமகிழ்ந்
துண்ணப்பா வென்றன்வினை யோட்டுவது மெக்காலம் 33

மண்ணுக்கிரையாக்கி வைக்காம லிவ்வுடம்புன்
கண்ணுக்குளேயிருக்கக் கடாக்ஷிப்ப தெக்காலம் 34

மேகமழை மின்னலிடி வெய்யவிடரைத் தீர்த்த
வேகபரனேயென் றேத்துவது மெக்காலம் 35

எத்தனைநாட் பாடுபட் டெடுத்ததிச் செனனம்
அத்தனையு மறந்துன்னுளாவ தெக்காலம் 36

உண்டிக் கிரைதேடி யுண்டுண் டுறங்காம
லெண்டிசையிலோடி யென்னு மென்றறிவ தெக்காலம் 37

சாயைப்போலிவ் வாழ்வின் சந்தோஷமாயப்
பேயையகற்றி யின்பம் பெறுவதினி யெக்காலம் 38

கண்டதெல்லாமாயை யென்றுங் காட்சியெல்லாஞ் சாயையென்றும்
விண்டவேடிக்கையை நான் விட்டொழிவ தெக்காலம் 39

அந்தக்கரணமெலா மம்புவியிற் போட்டொழித்து
கந்தன்முக மதுமீற கருணைபெற லெக்காலம் 40

---

கீர்த்தனம்.

இராகம், நாதநாமக்கிரிகை-தாளம், ரூபகம்.

பல்லவி.

முத்தே முகமது மீறு உனது இரு
பத்மப்பதமே யருள்வாய் பர (முத்)

சரணங்கள்.

தந்தையுந் தாயுமுனைத்தவிரத் தரணியிலே
சொந்தமெவருமில்லை கந்தா கருணைசெய்வாய் (முத்)

ஜென்மங் கன்மம் பிணியும் சிதரிப் பறந்துவிட
நன்மைமிக வருள்வாய் நாயகமானசாமி (முத்)

முத்தின்வித்தே யவ்வித்துள் முளைத்துத் தழைத்தோங்கிடுஞ்
சித்தமுடை படாதசெல்வச் சிகாமணியே (முத்)

தேஜோமயானந்தமாய்த் திருவாய் நிறைந்திலகும்
ராஜேஸ்பரகுருவே நாயகமே என்சாமி (முத்)
பெற்றபிள்ளை செய்த குற்றம் பெரிதாயிருந்திடினு
முற்றிலுமே பொறுத்து முத்தியருள் கிருபை (முத்)
உடற்பொருளாவியையு முன்னிடத்தி லளித்தேன்
கடலிற் றிசைதப்பிடுங் கப்பலாகாவண்ணங் காரும் (முத்)
பரக்கமுழித்து நிற்கும் பாவி வினையகற்றி
இரக்கம் வைத்தேழையையாள் என்றுமுனை மறவேன் (முத்)
பந்தவினை யகற்றிப் பரமகதி யருள்வாய்
சுந்தரமாக வெங்குஞ் சோதியரசு செய்யும் (முத்)

---

இராகம், கீர்வாணி-தாளம், ரூபகம்.

பல்லவி,

முகமது மீரு முனியே
ஜகமீதெனை யாள்வாய் நீயே (முக)

அநுபல்லவி.

பகவனே நீர்—ஐயா
பகருவாய் பரப்ரமனை நாட (முக)

சரணங்கள்.

என்னையாட் கொள்ளா திருக்கில்காயே னுய்யே
னிகபர சாதனை யிறையே யிதுமெய்யே
அன்னை தந்தை யெனு மன்பர்களு நீயே
யாதலினு னுனை யண்டிவந்தேனையே
ஆண்டருள்வாய்—ஐயா
அகண்டதத்வ ஞானானந்த வாழ்வே (முக)

மதிமிகு ஆத்ம வைத்ய நாதா
வாரணஞான மென்னுயிர் தாதா
கதிதருமோனக் கருவெனும் பாதா
காந்தர்வ வள்ளலே கசடள்மேல் வாதா
காருமையா—ஐயா
காரணத்தவ பேரானந்த வாழ்வே (முக)

மாட்சிமைநிறைந்த பெம்மானெனும் யோக்கியா
மட்டிலா ஆனந்த மார்க்கத்தின் பாக்கியா
சாட்சாதிரூப சைதன்னிய சாக்கியா
தாமதமென்னே தமியனை நோக்கியாள்
தாள்பணிந்தேனே—ஐயா
தாண்டவ ஞானனந்த வாழ்வே (முக)

இ-ம். சஹானு-தாளம், சாப்பு.

பல்லவி.

மாமதிமிகு முகமது மீரு துரையே
தாமதமென்னே தருமநெறி தானுரையே (மா)

அநுபல்லவி.

தேமணங் கமழ்திரு விளையான் குடி பிறந்த
சித்திச் சிறப்பினைக் கடந்தவா
முத்திமுதலினை யடைந்தவா (மா)

சரணம்.

பொன்னுடன் மண்ணும் பெண்ணும் புவிநீத்துபர
மென்னும் பொருண்மே லின்பமனமாயியைந்து
பன்னரும் புகழ்பரவிய மெய்ஞ்ஞானியனே
பத்திமிகுந்த மகத்தவ
முத்தியளித்திடுந் தத்துவ (மா)

வாழி விருத்தம்.

காரேறு முகில் வாழி கதிர்மதியும் வாழி
ககனமிசை வாழ்கின்ற வமரர் வாழி
ஈரேழு புவனமுடன் சப்தரிஷி வாழி
யிகபர சாதனமடைந்த முனிவர் வாழி
நாரேறு சேகப்பவொளி யவர்கள் வாழி
நான்மறையோ டியானுரைத்த நூலும் வாழி
சீரேறு முகமதுமீ ருவவர்கள் வாழி
சிறந்திடுமென் குருசாமி வாழி வாழி.

உ

சிவமயம்.

பரமகுருவே துணை.

இஃது

இளையான்குடி காரணசேகப்பா ஒலியார் அவர்களின்
பௌத்திரரும், குப்ப பிச்சை யவர்களின்
புதல்வரும், ஆன்ம ஞானனந்தம் பெற்றவருமாகிய
மகாமதி முகம்மதுமீரு சாகிபவர்கண் மீதும்
அவர்கள் மனைவியாராகிய
ஹலிமா அவர்கண் மீதும்
அ. இர. சுப்பிரமணியம்பிள்ளை அவர்கள்
களத்திரம்
ஸ்ரீமதி: இராஜம்மாள் பாடிய
பதிகம்.

---

ஆசிரிய விருத்தம்.

சீரான புகழிலகு மிளையான்குடிப்பதித்
தேவர்கோன் பீர் முகையதீன்
திவ்யகுண பாத்திமா விருவரின் தவமதால்
தேவி பார்வதி போலவே
பாரோர்கள் புகழவே பரலோகர் தொழுகவே
பாங்காக வேதோன்றியே
பாக்கியந்தவமற மோக்கிய மொழுக்கமெய்ப்
பக்ஷநெறி பொறை பொறுமையும்
பூரான புனிதகுண சாந்தமரு மறைதனிற்
பூத்தநறு மலர் சூடியே
புத்திபுகழ் சத்தியப் பொருளருளிற் காய்த்தநற்
பொங்குதேன் கனியுண்டமா

காரணஞ் சொல்லருங் கற்பரசியானதாய்
கருணை ஹலி மாளோடவர்
கணவன்சே கப்பமுகம் மதுமீறு விறையையுங்
கதிபெறுக வேபணி குவாம்.

மண்ணுன புவனத்தில் மகாகனந் தங்கிடும்
மகிமைமிகு மகராசியை
மதிரவித்திலஃத்தை மாணிக்க மணியினை
மாதவ மகாமேருவை
கண்ணுன வெனதருங் கருவூல மணியினைக்
காரணம ஞேன் மணியினைக்
கதிதருங் கிருபையின் கற்பருங் கனியினைக்
கல்விக் கடாக்ஷ நிதியை
விண்ணுேடு மண்ணெலாம் வெகுவொளியதாகவே
விளங்கிடு மெய்ச்சுடரினை
வித்தகன்முகம்மது மீறுவின் மனைவியை
விவேகதவ விமல வாழ்வை
எண்ணவொண் ணுப்பெரும் இறையருள் நிறைந்தவென்
இருதயக் கனியாகிய
ஈஸ்பரியதான அலி மாக்கிளிய ளம்மையை
இருகணீராழ புகற்வாம்.

இருளான மாயப்பிர பஞ்சத்தி லேழையா
ளினிமேலு முழலாமலே
இருவினை யறுத்தரு மினிமைமிகு ரசமதை
யின்பமுட னேயுண்டுமே
அருளோடு மேன்மையா யழியாத காயமா
யருவாய் நிறைந்திலங்க
அல்லுபக லற்றுவொரு சொல்லாலிருந்திடு
மத்துவித வித்தாகவும்

கருவான கருவதாய்க் காக்ஷிகதி யீந்திடுங்
  கருணைநிதி யானகுருவாய்க்
கவலருங் காரணக் கற்பகத்தருவதாய்க்
  கருணாக ரன்வடிவதாய்
உருவான முக்மது மீருவின் மனைவியா
  யோங்குமலி மாக்கிளியெனும்
உமையாளை னம்மையை மறவாமலனுதினமும்
  உண்மையுட னேதொழுகுவோம்.

---

அவை யடக்கம்.

கைக்குதலை கழறுமொழி கைப்பானுலுங்
கனிவுடனே பெற்றவன்னை கரிலெண்ணுள்போல்
கற்றவரும் மற்றவரு மேழை யெந்தன்
கவிதைதனிற் பிழைகாணிற் பொறுப்பீர் தாமே.

---

முற்றுப்பெற்றது.








# அக்ஷரப் பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 1 | தரிகித்து | தரிசித்து |
| ,, | 5 | தரிச்னஞ்செயது | தரிசனஞ்செய்து |
| 3 | 1 | அருகாமை யில் | அருகாமையில் |
| ,, | 10 | என்று யழியா | என்றுமழியா |
| ,, | 19 | கரையிவ் | கரையில் |
| 4 | 1 | ஸ்தோததிரம் | ஸ்தோத்திரம் |
| ,, | 8 | கொச்சடையபபனுக்கு | கொச்சடையப்பனுக்கு |
| ,, | 25 | தெரிவித்தாவ் | தெரிவித்தால் |
| ,, | 28 | மிருககிறது | மிருக்கிறது |
| ,, | 31 | கரையிற் சென்று | கரையில் |
| ,, | 33 | சவுண்டலீசர் | சவுண்டிலீகர் |
| 8 | 26 | நேட்டிடிருக்க | நேரிட்டிருக்க |
| 9 | 6 | கன்ன்றின் | கன்றின் |
| ,, | 29 | ஆலயத்துக்சூள்ளே | ஆலயத்துக்குள்ளே |
| 10 | 30 | எழ | ஏழ |
| 11 | 23 | கொபால | கோபால |
| 17 | 2 | நகற்தனைச் | நகர்தனைச் |
| 19 | 11 | மாறனே | மாரனே |
| 20 | 18 | அஞசியே | அஞ்சியே |
| ,, | 22 | மருகதி | மறுகதி |
| ,, | 23 | மாயபிரப்பஞ்சக்கின் | மாயப்பிரபஞ்சத்தின் |
| 27 | 14 | முந்திருப்ப | உவந்திருப்ப |
| 28 | 12 | பதம்பெருவ | பதம்பெறுவ |
| 30 | 5 | ஒலியா | ஒலியார் |
| 39 | 3 | மகிழந்துன் | மகிந்ழ்துன் |